# தவப் பயன்

கு. அழகிரிசாமி







தமிழ்ப் புத்தகாலயம்

576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5.

# முன்னுரை

இந்தக் கதைத் தொகுதியின் இரண்டாம் பதிப்புக்கு எழுதப்படும் முன்னுரை இது. முதற் பதிப்புக்குக் கோலாலம் பூரில் நான் இருந்தபோது எழுதி யனுப்பினேன். இந்தப் பதிப்பு முந்திய பதிப்பைவிடத் திருத்தம் பெற்று இப்போது வெளிவருகிறது.

இந்தத் தொகுதியில் உள்ள பதினொரு கதைகளும் 1942-க்கும் 1952-க்கும் இடையே பத்து வருஷ காலத்தில் பல்வேறு பத்திரிகைகளில் வெளிவந்தவை. சில கதைகள் ஒன்றுக்கு மேற்பட்ட தடவைகளிலும் நான் ஆசிரியனுக இருந்த பத்திரிகைகளில் வெளிவந்திருக்கின்றன. காலக் கிரமப்படி பின்கண்ட வரிசையில் கதைகள் வெளிவந்தன: "புது உலகம்," "பாம்புக் குட்டி," "பார்த்தது," "ஓட்டப் பந்தயம்," "மூல காரணம்," "காடாறுமாதம்," "தவப் பயன்," "வாத்தியாரம்மாள்," "17-ம் நம்பர் வீட்டு நாய்," "தகப்பனும் மகளும்," "ஆண்மகன்." இந்த வரிசையில் முதல் கதையான "புது உலகம்" 1942-லும், கடைசிக் கதையான "ஆண்மகன்" 1952-லும் எழுதப்பட்டவை. "மூல காரண"த்துக்கும் "காடாறுமாத"த்துக்கும் நடுவே மூன்று வருஷங்கள் கழிந்திருக்கின்றன என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவற்றுள் "ஆண்மகன்" செக்கஸ்லோவேகிய மொழியிலும் ஆங்கிலத்திலும் பெயர்க்கப்பட்டு வெளிவந்திருக்கிறது.

என் கதைகளை வெளியிட்டு ஊக்கமும் ஆதரவும் தந்த பத்திரிகைகளுக்கும், மொழிபெயர்த்து வெளியிட்ட செக்கஸ்லோவேகிய அறிஞர் கமில் ஸ்வெலபில் அவர்களுக்கும், தொகுப்பை முதல் பதிப்பாகவும் இப்போது இரண்டாம் பதிப்பாகவும் அழகுற வெளியிட்டுள்ள தமிழ்ப் புத்தகாலயத்துக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

கு. அழகிரிசாமி

12-6-'63

# பொருளடக்கம்

# தவப் பயன்

சுவாமி நிர்மலானந்தரை ஒருநாள் மாலை திடீரென்று ஆஸ்ரமத்தில் காணவில்லை. சாயங்காலம் ஐந்து மணிக்கெல் லாம் அவர் தனியே எழுந்து உலாவப் போவது வழக்கம். அப்போது சீடர்கள் எவரையும் அழைத்துக்கொள்ளாமல், தியானத்தில் ஆழ்ந்த வண்ணம் தன்னந் தனியாகவே நடந்து செல்லுவார். அநேகமாகப் பொழுது இருட்டுவதற்குள் சுவாமிகள் ஆஸ்ரமத்திற்குத் திரும்பிவிடுவார். திரும்பும்போது மட்டிலும் சிஷ்யர்கள் சிறிது தூரம் சென்று அவரை எதிர் கொண்டு அழைத்து வருவார்கள்.

அன்று நிர்மலானந்தர் சூரியாஸ்தமனம் ஆகி இரண்டு நாழிகைப் பொழுது கழிந்தும் வராததைக்கண்டு சிஷ்யர்கள் திடுக்கிட்டுப் போனார்கள். சுவாமிகளிடம் ஞானோபதேசம் பெறும் உயர்ந்த நோக்கத்துடன் சிலரும், திருநீறும் ஆசீர் வாதமும் பெறும் சாதாரண நோக்கத்துடன் சிலருமாக ஒரு சிறு கூட்டம் வழக்கம் போல வந்து ஆஸ்ரமத்தில் அமர்ந் திருந்தது; காத்திருந்தது.

சுவாமிகளை இன்னும் காணவில்லை.

சிஷ்யர்களைவிட பக்தகோடிகள் மிகவும் அதிகக் கவலை யில் ஆழ்ந்தனர்.

சிஷ்யர்களுக்கு ஓரளவு துணிச்சல் இருந்ததற்குச் சில காரணங்கள் உண்டு.

சில சமயங்களில் நிர்மலானந்தர் உலாவப் போகும் நோக் கத்துடன் ஆஸ்ரமத்தை விட்டுப் புறப்படுவார். ஆனால், ஆஸ்ர மத்தின் வேலியைத் தாண்டியதும் வெட்டவெளியில் அப் படியே உட்கார்ந்துவிடுவார்; உடனே பகவத் தியானம்தான். அன்று அவ்வளவோடு உலாவும் காரியம் முடிந்துவிடும். தியா

னம் கலந்ததும் நேரத்தைப் பார்த்துக்கொண்டு ஆஸ்ரமத்துக்குத் திரும்பிவிடுவார். இதற்கு விதிவிலக்காக தியானம் கலையும்போது நள்ளிரவு ஆகிவிட்டிருந்தாலும், மேற்கொண்டும் சாயங்காலத்தைப்போலவே பாவித்து, அந்தக் காடாந்தகாரமான நிசியிலும் உலாவப் போய்வருவது உண்டு.

அன்று அவர் திருவுள்ளம் எப்படி இருந்ததோ? அவரைக் கருவியாகக்கொண்டு ஆட்டுவிப்பவனின் திருவுள்ளப் பாங்கு எதுவோ? அவர் அன்று எங்கே, எந்த நிலையில், எதற்காகத் தாமதித்தாரோ?

சமீபத்தில் எங்காவது இருப்பார் என்ற நம்பிக்கையும் நேரம் செல்லச் செல்ல சிஷ்யர்களுக்குக் குறைந்துவிட்டது.

பக்தர்களின் மன வியாகூலமோ சிஷ்யர்களை அமைதியுடன் அமர்ந்து காத்திருக்கும்படி விடவில்லை.

மூவர்—சிஷ்யர்கள்—புறப்பட்டார்கள். பக்தகோடிகளில் வயதான கிழவர் ஒருவரும் கூடப் புறப்பட்டார்.

நல்ல நிலா அடித்தது.

பொட்டல் வெளியில் சுவடுகள் பதியாவிட்டாலும், நிர்மலானந்தர் எந்த வழியில் சென்றிருப்பார் என்பதைக் கண்டுபிடிப்பது சிரமம் அல்ல. ஏனென்றால் ஆஸ்ரமத்திலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் ஒற்றையடிப் பாதைதான் பரந்த வெளியை நோக்கிச் செல்லும் பாதை. வடக்குப் பாதை ஊரை நோக்கிச் செல்லுகிறது. வேறு பாதைகள் கிடையாது.

நான்கு பேரும் நடந்தனர். சமீபத்தில் எங்காவது நிர்மலானந்தர் அமர்ந்திருக்கக்கூடும் என்ற எண்ணத்தினால் கால் நடையில் பயபக்தி தயக்கம் கொடுத்தது. சுற்றிலும் இரையும் சிள்வண்டுகளின் ஓசையை நூலளவும் பாதிக்காதவாறு மௌனமாக, காலடி ஓசை கேட்காமல், பாதங்கள் அடி எடுத்து வைத்தன.

இப்படி ஒரு மைல் நடந்தார்கள்.

ஒரு மைலுக்கு மேலும் நடந்தாய்விட்டது.

பாதையின் வலதுபுறத்தில் சப்பாத்திக்கள்ளிப் புதரின் நடுவில் சிறிது மேடான ஒரு கரும்பாறை உண்டு. அது நிலவில், குழியில் விழுந்த யானையின் முதுகுபோலத் தோற்ற

மளித்தது. அதன்மேல் கரும்பரப்பை வகிர்ந்துகொண்டு செந் நிறத் தூலமாக ஏதோ கிடந்தது.

பரபரப்புடன் மனம் கலங்கி நால்வரும் அந்தப் பாறையை நோக்கி ஓடினர்கள். அவர்களில் ஏழை மனம் படைத்த ஒரு சிஷ்யனின் கண்களில் கண்ணீர் திரண்டது. உடன் சென்ற கிழவரின் இரைகின்ற சுவாசம் அந்த இடத்தில் மட்டுப்பட்டு மௌனம் பூண்டது நால்வரும் போய்ப் பார்த்தார்கள்.

காஷாயதாரியாகக் கருங்கல் சயனத்தில் கிடந்த நிர்மலா னந்தர் 'பூரணம்' பெற்று விடவில்லை. அன்றையத் தியானம் சயன அவசத்தில் நடைபெற்றது. அவ்வளவேதான். எதிர் பார்த்தபடி, சிஷ்யர்கள் பயப்படும்படியாக, எதுவும் நடந்து விடவில்லை. ஆனல்...

தன்னை மறந்து படுத்திருக்கும் நிர்மலானந்தரின் வாயி லும், வாயருகில் பாறையிலும், காய்ந்து சருகாகிப் போன பெயர் தெரியாத இலைகள் ஏதோ கிடந்தன. சப்பாத்திக் கள்ளி யின் காய்கள் சில பக்கத்தில் இருந்தன. சுவாமிகளின் ஒரு கால் பாறையிலும், மற்ருெரு கால் சப்பாத்திப் புதரிலும் கிடந் தது. இடையில் சுற்றியிருந்த காஷாயத் துணியின் செம்பாதி காற்றில் பறந்துபோய் சப்பாத்தியின்மேல் ஒட்டிக்கொண் டிருந்தது.

நால்வருக்கும் நிஷ்டையைக் கலைக்கப் பயம். ஆனல் சுவாமிகளின் பரிதாப நிலையைக் கண்டு சொல்லொணுத மன வேதனை.

அந்தப் பாறையின் சரிவான ஒரு பகுதியில், சுவாமிகளின் ஸ்தானத்துக்குச் சற்று இறக்கமாக, மரியாதையுடன் உட் கார்ந்து ஈஸ்வரத் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார்கள். உண் மையில் அது தியானம் அன்று; மௌனப் பிரார்த்தனையே.

எவ்வளவு நேரம் சென்றதோ?

சற்றே அபூரணமான அன்றைய நிலா, உச்சிவானத் தின் மைய விளிம்பைத் தொட்டதுபோல மேலேறி வந்து விட்டது.

சுவாமிகளின் சரீரம் சிறிது அசைந்தது. அசைந்ததெல் லாம் இவ்வளவே: பாறையில் கிடந்த மற்ருெரு காலையும்

எடுத்து சப்பாத்தியின்மேல் போட்டார். தாங்கமுடியாத சுமை கீழே விழுந்ததுபோல, கால் 'தொப்'பென்று சப்பாத்தியில் விழுந்தது. எத்தனை முட்கள் அந்த மிருதுவான கால்களில் குத்தினவோ என்று கவலைப்படத் தொடங்குமுன்பே, நல்ல பாம்பு ஒன்று சப்பாத்திப் புதரிலிருந்து திடீரென்று சீறி எழுந்து, தன் படத்தை அகல விரித்து, தலையைச் சாய்த்த வண்ணம் மிகவும் பலமாக சுவாமிகளின் இடது பாதத்தில் மோதிக் கடித்துவிட்டது. பாம்புக் கடியினால் சுவாமிகளின் மேனியில் சிறிதாவது சலனம் ஏற்படட்டுமே!

சிஷ்யர்களின் ரத்தம் உறைந்துவிட்டது. அடுத்தவனைப் பாம்பு படம் விரித்துக் கடிப்பதை மனிதவர்க்கமே கண்ணாரக் காண்பது, அதுதான் முதல் தடவையோ என்று கருதக்கூடிய வாறு அவ்வளவு பிரத்யக்ஷ நிலையில் நடந்தேறிய இந்த பயங் கரத்தைக் கண்டு எழுந்து ஓடிய அந்நால்வரும் சப்பாத்தியி லேயே மிதித்தார்கள். ஒவ்வொரு முள்ளும் ஒரு விஷப்பல்லா கக் குத்தியது. ஆனால் பாம்பு இவர்களை நோக்கி வரவில்லை. வேறு திசையில் நெளிந்துவிட்டது. பாறையின்மேல் மின்னி நெளிந்த அதன் சரீரம், பாறையில் ஏதோ விஷ ஊற்றுக் கிளம்பி வடிந்ததுபோல் இருந்தது.

இனி சுவாமிகளை எழுப்பாமல் இருந்தால் மரியாதைக்கு அர்த்தம் கிடையாது. பூவைப்போலத் தொடுவதுபோய், தரையில் புதைந்த ஆணிவேரைப் பிடுங்குவதுபோல் அவ் வளவு முரட்டுத்தனமாக சுவாமிகளைத் தூக்கி உட்கார வைத் தனர்.

நிர்மலானந்தர் எழுந்து அமர்ந்தார். அவருடைய விழிகள் மலர்ந்தன. வாயிலிருந்த சருகுகளைத் துப்பினார். துப்பும் போது, பாதி மென்ற கள்ளிப் பழம் ஒன்று முறிந்த முள்ளுடன் பாறையில் விழுந்தது

''இதுவா ஆகாரம்?'' என்று பிரமித்தார் உடன் சென்ற கிழவர்.

நிர்மலானந்தரின் ஆகாரம் எதுவென்று அவருக்கு இவ் வளவு காலத்துக்குப் பின் அன்றுதான் தெரியவந்தது. காரணம், கிழவர் ஆஸ்ரமத்துக்குப் புதியவர்.

“தங்களை விஷம் தீண்டி விட்டது” என்று சொன்னான் ஒரு சிஷ்யன், வாயை ஒரு கையால் மூடிக்கொண்டே.

மற்ற இருவரும், இரண்டு கால்களிலும் உள்ள சப்பாத்தி முட்களைத் தடவித் தடவிப் பிடுங்கினார்கள். அவர்களுடைய கைகளில், முள் தைத்த புண்களில் கசிந்த ரத்தம் படிந்து படிந்து, மருதாணி இட்டதுபோல மாறிவிட்டது.

“முட்களா? அவற்றை ஏன் பிடுங்க வேண்டும்?” என்று சாவதானமாகச் சொல்லிவிட்டு “எப்போது பாம்பு கடித்தது?” என்று கேட்டார் சுவாமிகள்.

கிழவர் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து விட்டார்.

நடந்த விருத்தாந்தத்தைச் சுருக்கமாகச் சொல்லி முடிக்கு முன்பே, நிர்மலானந்தர் “பாரம் தாங்கமுடியவில்லை; படுக்க வேண்டும்” என்று பாறையில் சாய்ந்தார்.

பாம்பு கடித்ததன் விளைவாக நிர்மலானந்தர் மயக்கம் எய்தி, பிதற்றுகிறாரென்றே நால்வரும் நினைத்தனர். விஷம் தலைக்கேறிக்கொண்டிருக்கிறது என்பது உண்மைதான் என்றாலும், பாரம் விஷத்தினால் வந்ததல்ல. மாமிச பிண்டத்தைத் தூக்கிச் சுமப்பது நிர்மலானந்தர் நெடுநாளாக அனுபவித்து வரும் வேதனை; அன்று சுமக்கவே முடியாமல் போனதனால் தான் பாறையில் போய்ப் படுத்துவிட்டார்.

பின்னும் காலதாமதம் கூடாது என்று, நிர்மலானந்தரை மூவரும் எடுத்துச் சுமந்துகொண்டு ஆஸ்ரமத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். தாம் நடக்கவே சிரமப்படும் கிழவர் பரிவோடு ஒரு கையினால், நிர்மலானந்தரின் சரீரத்தைச் சுமக்க முடியா விட்டாலும், தொட்டுக்கொண்டு தள்ளாடி நடந்து வந்தார்.

பாதி வழி தாண்டுமுன்பே, சுவாமிகளின் உதடுகள் ஒரு பக்கம் கோணித் திறந்தன. வாயில் கொப்பளித்த நுரை சிலந்திப்பூச்சியின் நூல்களைப்போலக் காற்றில் ஆடி அறுந்தன. நிர்மலானந்தரின் மண்ணுலகத் தொடர்பு, நுரைநூலைக் காட்டிலும் இலகுவாக, அவ்வளவு அரவம் அற்று அறுபட்டது. நிர்மலானந்தர் தம் வாழ்நாளெல்லாம் சுமந்த பாரத்தைத் தம் சிஷ்யர்களின் தோளிலும் தலையிலும் இறக்கி வைத்துவிட்டுப் போய்விட்டார்.

உபதேசத்துக்காகவும், ஆசீர்வாதத்துக்காகவும் வந்த ஜனங்களின் முன் நிர்மலானந்தரின் சரீரத்தைக் கொண்டு வந்து சேர்த்தார்கள் சிஷ்யர்களும் கிழவரும்.

மறுநாள் ஆஸ்ரமம் கல்லறையாக மாறியது.

* * * *

மண்பாண்ட ஓடு உடைந்துவிட்டது. மாயக் குயவர் அந்த ஓட்டைச் சமைத்து அதன் உள்ளே வைத்து அனுப்பிய ஆன்ம அமிர்தம் திவலைகூட மண்ணுலகக் குழப்பத்தில் சிந்தாமல் சிதருமல், கொடுத்தாலும் குறைவுபடாத நித்ய பூரண வஸ்துவாய், குயவரிடமே திரும்பியது. அமிர்தம், ஆகவேண்டிய காலம் ஆகி, நன்கு பண்பட்டு, சுவையோடும் திண்மையோடும் சுவர்க்கம் புகுந்தது.

நிர்மலானந்தர் மறைந்தார்; நிர்மலானத்தம் எஞ்சியது.

எண்ணற்ற முனிவர்களின், புண்ணிய புருஷர்களின், ஆன்ம சொரூபங்கள் இன்பத்தின் பரவெளியில் அமரபோகம் துய்த்துக்கொண்டிருக்கும் அந்தத் தெய்வ மண்டலத்தில் நிர்மலானந்தருக்கு மரியாதை மிகுந்த பீடம் கிடைத்தது. என்றுமாய் எதுவுமாய், காலமும் தூரமும் அற்றிருக்கும் இந்த சுவர்க்க போகம் அல்ல நிர்மலானந்தருடைய நித்ய தபசின் கோரிக்கை. மண்ணுலகத்தைத் துறந்த இதயம், விண்ணுலகத்தில் அதைப் பெற்று அனுபவிக்க விரும்பவில்லை.

இன்னும் 'நான்' நசியவில்லை; 'அவன்' இன்னும் அவனுகத்தான் இருக்கிருன். 'அவன்', 'நான்' ஆகவில்லை; 'நான்', 'அவன்' ஆகவில்லை. கேவலம் தூல சரீரத்தைக் களைந்துவிட்டால் ஈஸ்வர ஐக்கியம் கிட்டிவிடுமா?

இன்னும் எத்தனை வருஷங்கள், எத்தனை வியாழ வட்டங்கள் தபசிருக்க வேண்டுமோ, அந்த அத்வைத நிலையைப் பெறுவதற்கு? நல்ல வேளையாக இங்கு காலம் என்ற பிரக்ஞை இல்லை. ஆனுலும் சுவர்க்கத்தின் போக நிலத்தில், புழுவெனத் துடித்து உபசாந்தப் பரவெளியை நோக்கித் துள்ளித் துள்ளிக் குதித்துக்கொண்டிருந்தது நிர்மலானந்தரின் ஜீவான்மா.

பரமான்மா வந்தது; பூலோகப் பஞ்சாங்கப்படி, நிர்மலா னந்தரின் ஆன்மா சுவர்க்கத்துக்குப் போன பதினைந்தாம் நாளில் கடவுள் அந்தப் புதிய விருந்தைக் காண வந்தார். மோனப் பிரார்த்தனை அன்றே கடவுளுக்கு எட்டியது என்ரு லும், சுவர்க்கானுபவச் சதுரங்கத்தில் நிர்மலானந்தரின் ஆன்ம விளையாட்டு வெற்றி பெறுகிறதா தோற்கிறதா என்று பரி சோதனை செய்யத் தொடங்கியதுதான் இந்தப் பதினைந்து நாள் தாமதத்துக்குக் காரணம்.

பதினைந்து நாட்களுக்குப் பின் நிர்மலானந்தரின் முன் பிரசன்னமானுர் கடவுள். வாழ்நாளெல்லாம் தபசில் கழித்த தம் பக்தசிரோன்மணிக்கு இந்தப் பதினைந்து நாளைய அனு பவம் எவ்வளவு பெரிய சுகத்தை அள்ளிக் கொடுத்திருக்கும் என்று எண்ணி ஆனந்த பரவசத்துடன் பக்தனைக் காண வந் தார். மறு தினந்தான் நிர்மலானந்தரின் கடைசித் தளையை, எஞ்சியிருக்கும் 'நான்' என்ற பிரக்ஞையை, சுட்டறுப்பது என் பது தெய்வத் திருவுள்ளம்.

தெய்வ விஜயம், பிரக்ஞையைப்போன்ற ஒரு சங்கேதத் தின் மூலம் நிர்மலானந்தருக்குத் தெரிந்தது. இறைவனின் பாதத்தில் மலர்ப்பலி இடுவதைப் போல தம் ஆன்மாவைப் பரி பூரணமாகச் சமர்ப்பித்தார் நிர்மலானந்தர்.

"சுவர்க்கம் பிடிக்கவில்லைபோலும்! உம் கோரிக்கையை அறிந்தோம். உம் ஆன்மத் தேட்டம் விரைவில் சித்திபெறும்" என்ருர் கடவுள்.

கடவுளின் வார்த்தைகளை எல்லாம் கிரஹித்துக்கொண்டா லும், சுவர்க்கம் என்ற பதம் நிர்மலானந்தரைப் பிரமிக்கச் செய்துவிட்டது.

'சுவர்க்கம்!...சுவர்க்கம் என்ருல்...அப்படியானுல் தற்போ தைய வாசஸ்தலம் சுவர்க்கம்தானு?' என்ற திகைப்பு நிர்மலா னந்தரை ஊமையாகிவிட்டது. எழுதாக் கிளவிக்கு நாயகனுக இலங்குபவனுக்குப் பேசாத சிந்தை, தாய்மொழியைப் போல நன்கு பரிச்சயப்பட்ட ஒன்று. நிர்மலானந்தரின் திகைப்பு அவ ருக்குப் புரிந்தது.

“சுவர்க்கம் இல்லாமல் வேறு என்ன? நரகம் என்று நினைத்தீரா?”

கடவுள் சிரித்தார்!

“எதுவும் நினைக்கவில்லை. சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் பேதம் காணும் அந்த சரீர பரிசோதகன் என்றோ சாம்பலாகி விட்டான் என்பது தாங்கள் அறியாதது அல்லவே? மண்ணுலகிலும்கூட மலருக்கும் முள்ளுக்கும், மலருக்கும் விஷப் பல்லுக்கும் வேற்றுமை கண்டறியாதிருந்த ஜீவன் இப்போது ஐம்பொறிக் கூட்டை உதறிவிட்ட பிறகு, சுவர்க்கத்தை எங்ஙனம் உணரும்? நரகத்தை உணர்வதும் எங்ஙனம்?”

* * * *

மாயக் குயவர் எத்தனையோ லட்சோப லட்சம் மண் பாண்டங்களை வனைந்துகொண்டிருக்கிறார். அவற்றில் எத்தனை பங்கப்படாமல், விதித்திருக்கும் காலவரையறை வந்து சந்திக்கும் வரையிலும் பயன்பட்டு, வினைபயன்களை விண்ணுக்கு அனுப்புமோ? எத்தனை மண்பாண்டங்கள், கூத்தாடிக் கூத்தாடித் தம்மையே உடைத்துப் பாழாக்கிக்கொள்ளுமோ? மண் பாண்டங்கள், பற்பல உருவில், பற்பல வர்ணங்களில் தயாராகிக் குவிந்திருக்கின்றன.

குயவர் ஒரு சிறு பாண்டத்தை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறார். அது பூவுலகில் ராஜகுமாரனாக வந்து பிறக்குமோ, ஒரு முனிவனாக வந்து அவதரிக்குமோ தெரியவில்லை. ஆனால் பாண்டம் உருப்பெறாமல் குலைந்து சரிந்து கொண்டிருந்தது. வேறு பல கலவைகளைச் சேர்த்துக் குழைத்துப் பாண்டத்தை உருவாக்க முயன்றார் குயவர். பழையபடியும் அது கருவிலேயே சிதைவுற்றது. மற்றும் பல கலவைகளைக் கலந்து திரும்பவும்...

கடவுள் நையாண்டிச் சிரிப்புச் சிரித்தார்.

“மாயக் குயவரே! பாண்டத்தின் உருவ அமைப்பைச் சிதையாமல் நிறுத்தி வைக்கும் பிரதானமான கலவை என் அடைக்கலத்தில் உள்ளது.”

கைசோர்ந்துபோய் வணக்கத்துடன் திரும்பிப் பார்த்தார் மாயக் குயவர்.

''ஜீவான்மா ஒன்று மண்ணுலகிலிருந்து விடுதலைபெற்றுத் துறக்கம் பெற்றது. பிரம்ம ஐக்கியம், இரண்டறக் கலக்கும் அத்வைத நிலை—இதுதான் அதன் இன்றையக் கோரிக்கை. அந்த ஆன்மாவும், அதன் கோரிக்கையும் அந்தரத்தில் நிற்கும் போது பாண்டத்தை உருவாக்குவது எப்படி?''

மௌனமாக இருந்தார் மாயக் குயவர்.

''மண்ணுலகில் அது மலருக்கும் முள்ளுக்கும் பேதம் காண வில்லை; புலன்களைச் சுட்டறுக்கும் தபசை மேற்கொண்டுவிட் டது. சுவர்க்கம் எய்தியது.

''சுவர்க்கத்தின் தன்மை அந்த ஜீவனைத் தீண்டக்கூட இல்லை. சுவர்க்கத்தில் இருக்கிற பிரக்ஞையாவது இருக்கட் டுமே! இன்று அதை நரகத்துக்கு அனுப்பினாலும் இன்றைய நிலையை இழக்காத பக்குவத்துடன் அது இருக்கிறது.

''அது வேண்டுவது பிரம்ம ஐக்கியம்; பரமாத்ம-ஜீவாத்ம சங்கமம். அது கிட்டினால் அந்த ஆத்மா மாறுதல் பெற்று விடுமா? இன்ப துன்பத்தை உணராத பேரின்ப உபாசகனாக இருந்த அந்த ஆத்மா எம்மோடு அத்வைத நிலையில் இருந் தால் என்ன? ஆஸ்ரமத்தில் சந்நியாசியாக இருந்தால் என்ன? இரண்டும் ஒன்றுதான்.

''இன்ப துன்பத்தை உணராத தபசென்றாலும்கூட இந்தத் தபசு பயங்கரத் தபசு. சுவர்க்க நரக பேதங்களையும், அத் வைத வெளியையும் ஆஸ்ரம வெளியையும் ஒன்றாக்கும்படி யான இந்தப் பயங்கரத் தபசு சுவர்க்கத்திலும் சுகம் காண வில்லை; பரப்பிரம்மத்திலும் சுகம் காணப்போவதில்லை. மரத் துப்போனது, செத்தது, எங்கே கிடந்தால் என்ன? முக்தியும், முதல்வனும் சாலையோரச் சத்திரங்களாகிவிட்டன; லட்சிய ஸ்தானங்களாக இல்லை. அந்த ஆத்மாவுக்கு இனி எந்த வழி யைக் காண்பிப்பது?

''தபசிற்குப் பலனாக, சுகமான வாழ்க்கையை, உணர்ந்து துய்க்கும் ஒரு பிறப்பை, பழையபடியும் அதே பூலோக வாழ்க் கையை, அதற்குச் சுட்டிக் காட்டுவதைவிடச் சிறந்த பிரதி

உபகாரம் வேறு எதுவும் இல்லை. அதற்குச் செய்யும் பேருதவி யும், பரிகாரமும், பிராயச்சித்தமும் அதுவே.''

நிர்மலானந்த சுவாமிகள் காலமான பதினாறும் நாளில், ஆஸ்ரமத்தோட்டத்தின் நடுவில் சிவலிங்கம் வைத்துக் கட்டப் பட்டு இன்னும் ஈரம் உலராது இருக்கும் அவருடைய சிமிண்ட் சமாதியின் தென்புறத்தில், அன்றுதான் பிறந்த ஒரு அணில் குஞ்சு, மண்ணுலகை முதல் முதலாக ஸ்பரிசித்துக்கொண் டிருந்தது. அதன்மேல் படும் காலை இளவெய்யில் அதற்குச் சுவர்க்க போகமாக இருந்தது. தன்னை மறந்து, அந்த இன்பத் தில் ஆழ்ந்து, அதில் இரண்டறக் கலக்கவும் செய்தது அந்த அணில் குஞ்சு.

# பார்த்தது

''ஒரு முறை போய் வரவேண்டியதுதான். எவ்வளவு நாளாய் விட்டது ஊரைவிட்டு வந்து?''

ராமகிருஷ்ணனுடைய கடிதம் கிடைத்ததிலிருந்து எனக்கு இதே நினைப்பு. சொந்த ஊரைப் போய்ப் பார்த்து வரவேண்டும் என்று கட்டுக்கடங்காத ஆசை உண்டாகிவிட்டது. தவிரவும் இப்போது சித்திரைத் திருநாளையொட்டி வரச்சொல்லி அவன் கடிதம் எழுதியிருந்தான்.

இரவு பதினொரு மணியாகியும் தூக்கம் பிடிக்கவில்லை. வராந்தாவில் கட்டிலில் புரண்டு படுத்துக்கொண்டிருந்தேன். நெஞ்சிலே சிந்தனைகள் புரள ஆரம்பித்துவிட்டால் உறங்குவது எங்கே? வீட்டுக்குள் எழுந்து சென்றேன். அம்மா, பின்கட்டில் பாத்திரங்களை எடுத்துப் பலகைமேல் வைத்துக் கொண்டு, ஏதோ வேலையாக இருந்தாள். 'சரி, ஊருக்குப் போகிற விஷயத்தைக் காலையில் சொன்னால் போகிறது' என்று நினைத்துக்கொண்டு பழையபடியும் வெளியே திரும்பினேன். இடது பக்கத்து அறை திறந்து கிடந்தது. அங்கே குத்துவிளக்கில் எண்ணெயில்லா ல் திரி கருகிக்கொண்டிருந்தது. மிகவும் மங்கலான வெளிச்சத்தில் பங்கஜம் அயர்ந்து தூங்குவதைப் பார்த்துக்கொண்டேன். ஆகவே சந்தடி செய்யாமல் அறைக்குள் நுழைந்து விளக்கின் பக்கத்திலிருந்த எண்ணெய்க் கிண்ணத்தை எடுத்து மெதுவாக விளக்கில் சாய்த்தேன். இந்தச் சிறு சந்தடியில் எப்படியோ பங்கஜம் விழித்துக்கொண்டாள்.

''விளக்கில் எண்ணெய் விடக்கூட ஞாபகமில்லாமல் படுத்துவிட்டேன்'' என்று எழுந்தாள்.

''வேண்டாம்; நீ தூங்கு'' என்றேன். நான் கோபத்தினால் அப்படி ஏளனமாகச் சொல்லிவிட்டேன் என்று நினைத்துக் கொண்டு முகத்தைச் சுளித்தாள். விளக்குத் திரியை நன்றாகத் தூண்டிவிட்டு எழுந்தேன். அவள் ஒன்றும் பேசாமல் தலை

குனிந்த வண்ணம் உட்கார்ந்துகொண்டிருந்தாள். 'இந்தப் பெண்களுக்குத்தான் எவ்வளவு நொந்த மனசு' என்று நினைத்துக்கொண்டு அவளைத் தேற்றுகிற முறையில் அவள் பக்கத்தில் கட்டிலில் உட்கார்ந்தேன்.

"நான் என்ன தூங்கவா செய்தேன்? ரொம்பவும் அலுப்பாக இருந்தது. அதனால் இப்போதுதான் தலையைச் சாய்த்துக் கொஞ்சம் கண்ணை மூடினேன்" என்று சொல்லிவிட்டு மிகுந்த ஆயாசத்துடன் மூச்சு விட்டாள்.

"அட பைத்தியமே! நான் என்ன கோபித்துக்கொண்டு விட்டதாக நினைக்கிறாயா? உண்மையாக நீ அயர்ந்து தூங்குவதைக் கெடுத்துவிட்டேன் என்று எனக்கு வருத்தமாக இருக்கிறது" என்று சொன்னேன். படுத்துக்கொண்டாள்.

பங்கஜத்துக்கு ஏழு மாதம்; தவிரவும் உடம்புக்கும் சரியாயில்லாதபடி மெலிந்துபோனாள். எந்நேரமும் ஒரே களைப்பு. தலையை இலேசாக மேலே தூக்கிச் சரிந்துகிடக்கும் தலையணையைக்கூட நேராக வைத்துக்கொள்ள முடியவில்லை. அவ்வளவு பலஹீனம்!

"இங்கே எதற்காக வந்தீர்கள்?"

"நாளைக்கு ஊருக்குப் போகவேண்டுமென்றிருக்கிறேன். அதைச் சொல்லிவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்."

"இருந்தாற் போலிருந்து எப்படி ஊரை நினைத்துவிட்டீர்கள்?"

"ஏழெட்டு வருஷங்களுக்குப் பிறகு திருநாளுக்கு வரச் சொல்லி ராமகிருஷ்ணன் கடிதம் எழுதியிருக்கிறான். எனக்கும் போய் வரவேண்டும் என்ற ஆசைதான்."

"எனக்கும் கூட ஆசைதான். எங்கே முடியப் போகிறது? ஜானகியைக் கண்டால் நான் ரொம்பக் கேட்டதாகச் சொல்லுங்கள். போனால் திரும்ப எவ்வளவுநாள் பிடிக்குமோ?"

"அதிகமாய்ப் போனால் ஒரு வாரம் ஆகும்."

"கட்டாயம் போக வேண்டியதுதான். ஜானகி கல்யாணத்தன்று ஊர்வலம் வீடு போய்ச் சேருவதற்குமுன்பே, ரயிலுக்கு அவசரமென்று நாம் ஓடிவந்த அழகையும் உங்கள் சிநேகிதருக்குச் சொல்லுங்கள்" என்று சிரித்தாள்.

கொஞ்சநேரம் கழித்து வெளியே வந்து படுத்தேன். பங்கஜத்தை இந்த நிலையில் விட்டுப்போகவும் மனம் வரவில்லை. ஆனாலும் எட்டு வருஷங்களுக்கப்புறம் அவன் கடுதாசி போட்டதற்குப் போகாமல் இருப்பதா என்ற எண்ணம் ஒரு பக்கம்.

கிருஷ்ண பக்ஷமானதால் ஆகாயத்தில் நட்சத்திரங்கள் அளவுகடந்த பிரகாசத்தோடு வெட்டிக்கொண்டிருந்தன. பழைய நினைவுகளைக் கிளறிவிட வானக்காட்சி ஒரு நல்ல ஞாபகார்த்தப் பொருள். ஒரு சம்பவம் நடந்த காலத்திலும், அதை நினைத்துப் பார்க்கக்கூடிய காலத்திலும் ஒரே மாதிரியாக இருப்பவை வானமும் நட்சத்திரங்களும்தான். ஊரில் அனுபவித்த சந்தோஷகரமான அனுபவங்களை எழுதிக் காட்டுவது போன்ற நட்சத்திர வரிசைகளைப் பார்த்துக்கொண்டிருந்த நான் எப்போது தூங்கினேனோ தெரியாது.

## 2

"சரி, போய் வருகிறேன் அம்மா! இன்னும் வண்டிக்கு இருபது நிமிஷம்தான் இருக்கிறது."

"போய்விட்டு வா. சீக்கிரம் வந்து சேரு..." என்று அம்மா சொல்லி முடிக்கும் முன்பே,

"ஆமாம். ஒரு வாரம் என்கிறது ஒரு மாதம் ஆனாலும் ஆய்விடும்" என்று எச்சரித்தாள் பங்கஜம். விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு வந்தேன்.

வண்டியில் போகும்போது ஊர் ஞாபகத்தைத் தவிர்த்து வேறொரு சிந்தனை கிடையாது. கல்யாணத்தன்று ஜானகியும் ராமகிருஷ்ணனும் ஊர்வலம் வரும்போது கண்ட அந்தக் காட்சிக்குப்பின் இப்போதுதான் அவர்களைப் பார்க்கப் போகிறேன்.

ஜானகி என் உடன்பிறந்த சகோதரி மாதிரி அவ்வளவு உரிமையோடு பழகியவள். அவளுக்கும் என்னுடைய ஊர்தான். ராமகிருஷ்ணன் மூலமாக அவள் பழக்கமானாள் என்று சொல்ல முடியாது. சிறுவயதிலிருந்தே என்னை அவளுக்குத் தெரியும்; எனக்கும் அவளைத் தெரியும். உண்மையாக,

பங்கஜம் எவ்வளவோ அழகானவள் என்றாலும் அவளைவிட ஜானகி எத்தனையோ மடங்கு அழகு. ஜானகியை எவ்வளவு வர்ணித்தாலும் தகும். எந்தவிதமான புடவை ஆபரணம் என்றாலும் அவளுக்குப் பொருத்தமாக இருக்கும். அவளுடைய அழகின் சாந்நித்தியத்தில் எத்தனை முறை வாயடைத்துப் போய்க் கல்லாக நின்றிருக்கிறேன்! நான் நிலைமையைச் சமாளித்துக்கொள்ளுவதற்கு முன் ஜானகி நாணத்தோடு ஓடிவிடுவாள்.

இத்தனை வருஷங்களும் எனக்குக் கடிதம் எழுதாமல் இருந்ததற்கு ஜானகியின் கண் முன்பாகவே ராமகிருஷ்ணனைக் கோபித்து அசடாக்கிப் பார்க்கவேண்டும் என்ற ஆசை! ஆனால் ஜானகிக்கு முன்னிலையில் நான் அசடாகிவிடக் கூடாதே என்று பயமாகவும் இருந்தது. அளவுகடந்த வெளிச்சத்தின் முன் கண் கூசித் தவிப்பதைவிட, அழகின் முன்னால் ஸ்திரமாகக் கொஞ்சநேரம் நிற்பது எவ்வளவோ கஷ்டமாக இருந்தது.

பங்கஜத்தைப் பற்றிய நினைப்பும் இடையிடையே சிந்தனைகளை ஆக்கிரமித்துக்கொண்டு நின்றது. பங்கஜத்தின் தற்போதைய நிலையில் ஜானகியோடு ஒப்பிட்டால் மலைக்கும் மடுவுக்குமாக இருக்கும். இருவருக்கும் ஏறக்குறைய சம வயது; இருபத்தைந்து இருக்கும். ஆனால் பங்கஜம் நோய் நொடியால் மெலிந்துபோயிருப்பதைக் கண்டால் பருவத்தின் எல்லையைக் கடந்து சற்று முதுமை படிந்திருப்பதுபோலத் தோன்றும்.

## 3

ஒரு வழியாக ஊர் வந்து சேர்ந்தேன். வண்டியைவிட்டு இறங்கும்போது மனத்தில் ஒரே படபடப்பு! நமக்கு வேண்டியவர்களையெல்லாம் ஒரே நொடியில் பார்த்துவிட வேண்டும் என்று அவசரம்! நான் போகும்போது ராமகிருஷ்ணனும் வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் அவனுக்கு ஒரே ஆச்சரியம்! பதில் கடிதம் கூட எழுதாமல் முன் பின் தகவலின்றி வீட்டின் முன்னால் வந்து காட்சியளித்தால் யாருக்குத்தான் ஆச்சரியமாயிராது?

ராமகிருஷ்ணன் என்னை மாடிக்கு அழைத்துச் சென்று க்ஷேமம் விசாரித்தான். ஆனால் நான் சந்திரோதயத்தை எதிர்பார்ப்பதுபோல் ஜானகியின் வருகைக்காகவே மாடிப் படிகளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். ராமகிருஷ்ணன் இறங்கிப்போய் ஒரு செம்பில் தண்ணீரும் பல்பொடியும் கொண்டு வந்து வைத்தான். சிறிதுநேரத்தில்...

...கையில் பண்டங்களோடு வந்தாள். இது யார்? ஜானகி தானா? என்ன இது, உருமாறிப்போன கோலம்! இவள்தான் பழைய ஜானகி என்ற ஒரு உணர்ச்சியைத் தவிர வேறு எந்த விதமான நம்புவதற்கேற்ற ஆதாரங்களும் இல்லையே! காவியம் எழுதியிருந்த அவளுடைய சரீரம்தானா இது? அந்தப் பிரகாசமான கண்கள், யௌவனம் கொப்பளித்துக்கொண்டிருந்த அவயவங்கள்...என் கைப்பொருள் ஒன்று நழுவித் தொலைந்துவிட்டதுபோன்ற பெருந் திகைப்பாகிவிட்டது.

சமாளித்துக்கொண்டவனாய்ப் பல் விளக்கிக்கொண்டு இலையின்முன் உட்கார்ந்தேன். ஜானகி பரிமாறினாள். சாப்பிட்டுக்கொண்டிருந்தேன்.

எட்டு வருஷங்களுக்குள் இந்த மாறுதல்! இனி...? கண நேரத்தில் பூத்துக் கருகிவிடும் மலர்களைப்பற்றிப் படித்த கவிதைகள், வாழ்க்கையின் நிலையாமையைப்பற்றி நான் எங்கெங்கோ கேட்ட பிரசங்கங்கள்—எல்லாம் ஜானகியின் உடலில் சோகச் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருந்தன.

சாப்பிட்டுக்கொண்டிருந்தேன்.

"அக்காளையும் அழைத்துவரக் கூடாதோ?" என்று ஜானகி கேட்டாள். ஒரு புன்சிரிப்பால் பதில் சொன்னேன். ஆனால் ஜானகியின் சொற்கள் மனத்தில் என்னென்னவோ எண்ணங்களை விதைத்துவிட்டன.

ஆம். இதோ பங்கஜத்தின் உருவம் என் கண்முன் வருகிறது. திருமணப் பந்தலில் கடைக் கண்களால் பார்த்துக்கொண்ட பங்கஜமா இவள்? ஜானகியிடத்தில் மட்டும் பரிதாபப்படுவதற்கு பங்கஜம் ஒன்றும் விதிவிலக்காகி விடவில்லையே! காலம் அவளிடத்திலும் தாக்ஷண்யம் ஒன்றும் காட்டி விடவில்லை. இப்போது பங்கஜத்தின் பழைய உருவத்தைக்கூட

என்னால் கற்பனைசெய்து பார்க்க முடியவில்லை. தினந்தோறும் அவளைக் கண்ணெதிரே பார்த்து வந்ததில் அவள் வனப்பெல் லாம் மெள்ள மெள்ள நழுவிப் போய்க்கொண்டிருந்தது தெரி யாமல் போய்விட்டது. ஆனால் இதோ, பூதக்கண்ணாடி போன் றிருக்கிறது ஜானகியின் மாறுதல். பங்கஜம் கோரமான மாறுத லடைந்திருக்கிறாள்; அவளுடைய யௌவனத்தின் சித்திரத் தில் தீட்டிய வண்ணங்கள் உலரு முன்பே அழித்து மெழுகி விடப்பட்டன என்ற உண்மை இந்தக் கண்ணாடியின் மூலம் தான் கண்களுக்குப் பட்டது. அந்த அழகின் சாரமெல்லாம் எங்கு வடிந்து விட்டதோ?

"மேலேயே என்ன பார்த்துக்கொண்டிருக்கிறாய்? சாப் பிடு" என்றான் ராமகிருஷ்ணன்.

எதைப் பார்க்கப்போகிறேன்? உலகத்திலே ஒரு மூலை யில், கண்களை மயக்கிவிட்டு, தன்னை யறியாமல் நடக்கும் சோக நாடகம் ஒன்று போதாதா பார்ப்பதற்கு?

# தகப்பனும் மகளும்

இது ஒரு சிறுகதை; கட்டுரையல்ல. கீழே காணப்படுவது வீடு கட்டுவதற்காகப் போடப்பட்ட பிளான் அல்ல; ஆனால் ரயில் வண்டிப் பெட்டி ஒன்றின் உட்புறத்தின் பிளானாகும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| ஜ | | | | | | ஜ |
| × | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| × | | | | | | 1 |

பிளானைப் பார்த்துக்கொண்டீர்களா? இனிமேல் விபரத்தைப் பாருங்கள்:

1. கதாநாயகி உட்கார்ந்திருந்த இடம்.

2. கதாநாயகியின் தங்கை உட்கார்ந்திருந்த இடம்.

3. என் நண்பர் கோபாலன் உட்கார்ந்திருந்த இடம்.

(இவரையும் என்னையும் கதாநாயகர்களாக்கக் கடும் பிரயாசைப்பட்டார் கதாநாயகியின் தகப்பனார். ஆனால் நாங்கள் அதற்கெல்லாம் விட்டுக் கொடுப்போமா? அவரையே கதாநாயகராக்கிவிட்டோம். விபரத்தைக் கதையில் காண்க.)

4, 5, 6, 7—கதைக்கு நேரடியான சம்பந்தமில்லாத பேர்வழிகள் உட்கார்ந்திருந்த இடங்கள்.

8. நான் உட்கார்ந்திருந்த இடம்.

9. கதாநாயகியின் தகப்பனார் உட்கார்ந்திருந்த இடம். கதாநாயகரும் இவரே.

10, 11, 12, 13, 14 — இந்த ஐந்தும்கூடக் கதைக்கு நேரடியான சம்பந்தமில்லாத பேர்வழிகள் உட்கார்ந்திருந்த இடங்களே.

ஜ, ஜ — இந்த இரண்டு எழுத்துக்களும் முறையே ஜன்னல், ஜன்னல் என்ற வார்த்தைகளைக் குறிப்பிடுகின்றன.

× × — கதாநாயகரின் இரண்டு பெட்டிகள்.

இதுதான் விபரம்.

இனிமேல் கதையைச் சொல்லுகிறேன். அன்றொரு நாள்; அதாவது சுமார் இரண்டு ஆண்டுகளுக்குமுன் ஒரு நாள். என் நண்பர் கோபாலன் டிசம்பர் விடுமுறையைக் கழிக்கச் சென்னைக்கு வந்திருந்தார். டிசம்பர் விடுமுறை முடிந்ததும் ஊருக்குத் திரும்பினார். நானும் இரண்டு வாரம் 'லீவு' எடுத்துக் கொண்டு கோபாலனுடன் ஊருக்குப் புறப்பட்டேன். அவருடைய ஊரும் என்னுடைய ஊரும் ஒரே ஊர்தான். எனக்குச் சென்னையில் வாரக் கணக்கில்கூட விடுமுறை கிடைக்காத வேலை. அவருக்கு மாதக் கணக்கில்கூட விடுமுறை கிடைக்கும் வாத்தியார் வேலை. எங்கள் இருவருக்குமே வயது இருபத்தைந்துதான் ஆகிறது. ஆனால் கல்யாணம் ஆகவில்லை. இதற்கு என்ன காரணம்? என் சம்பந்தப்பட்ட மட்டில் காரணத்தைச் சொல்லி விடுகிறேன். எனக்கு முறைப் பெண்களாக உள்ளவர்களில் ஒருத்திகூட அழகான பெண்ணாக இல்லை. ஒருவேளை 'முறைப் பெண்கள்' என்ற காரணத்தினாலேயே அவர்கள் அழகில்லாதவர்களாகக் காணப்படலாம். அது எப்படியும் போகட்டும். நான் அழகான பெண்ணைத்தான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று விரும்பி, கல்யாண காலத்தைத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தேன். என் கண்ணில் பல அழகான பெண்கள் தட்டுப்படாமல் இல்லை. சில பெண்கள் தூரத்திலிருந்து பார்க்க மட்டும் அழகாகவும், சில பெண்கள் போட்டோ படத்தில் மட்டும் அழகாகவும், சில பெண்கள் மூக்குக் கண்ணாடி போட்டிருக்கும் போது மட்டும் அழகாகவும், சில பெண்கள் மூக்கு மட்டும் அழகாகவும், சில பெண்கள் முகத்தை மறுபுறம் திருப்பிக்கொண்டால் மட்டும் அழகாகவும்—இப்படியே இருந்தார்களே ஒழிய உண்மையில் அழகாக இல்லை. ஆனால், சில பெண்கள் மட்டும் உண்மையில் அழகாகத்தான் இருந்தார்கள்; இருந்தும், அவர்களை என் நண்பர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்கள் ஒப்புக்கொள்ளத் தயாராக இருந்தாலும், அந்த அழகிகள் என்னைக் கல்யாணம் செய்துகொள்ளத் தயாராக இல்லை. ஏனென்றால்

நான் அழகாக இல்லாததே காரணம். இப்படியாக நான் அழகியை விரும்பிய காரணத்தால் எனக்கு இதுவரையில் கல் யாணமே ஆகவில்லை. ஆனால் எப்பொழுதாவது ஆகும் என்று தான் நம்புகிறேன். என் எதிர்கால மனைவி, (நீங்கள் பிரம்மச் சாரிகளாக இருந்தால்) உங்கள் எதிர்கால மனைவியைப் போலவே பேரழகி. ஒரு இம்மியளவு குறைந்த அழகோடு எந்தப் பெண் வந்து எனக்குக் கனகாபிஷேகம் செய்தாலும், நான் அவளை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை. இது நிச்சயம். இப்படிப்பட்ட என்னைப் பார்த்து, கதாநாயகர் என்னென் னவோ சந்தேகப்பட்டது பைத்தியக்காரத்தனம் அல்லவா? நிற்க.

கோபாலன் கல்யாணம் செய்துகொள்ளாத காரணம் எது என்று எனக்குத் தெரியாது. ஆனால், அவர் அழகான பெண் ணுக்காகக் காத்திருக்கக்கூடாது என்பதுதான் என் பிரார்த் தனை. அப்படி அவர் காத்திருந்தால் பழங்காலத்து ராஜகுமாரர் களைப்போல ஒரு குறிப்பிட்ட பெண்ணுக்காக நாங்கள் இருவ ரும் சண்டை போடும்படி ஆகிவிடும் அல்லவா? இதுவும் நிற்க.

திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஏறினோம். இரவு எட்டு மணி இருக்கும். எங்களுக்குச் சௌகரியமாக இடம் கிடைத் தது. ஜன்னலை ஒட்டி எதிரெதிராக நானும் கோபாலனும் உட்கார்ந்துகொண்டோம். 'வறுமையில் செம்மை' என்பது போல, மூன்றும் வகுப்பிலும், இந்த இடம் மாமனார் வீட்டுக்குச் சமானமான பெருமையை உடையது. நான் உட்கார்ந்திருந்த பெஞ்சில் நிறைய ஆட்கள் இருந்தார்கள். எதிர்வரிசைப் பெஞ் சில் மட்டும் மேற்கொண்டு ஒரு ஆளுக்கு இடம் இருந்தது. அதுவும் அந்த ஆள், என் தங்கையின் வாத்தியாரம்மாள் போலக் கனமான ஆளாக இருக்கக்கூடாது. அந்த இடத் துக்கு யாரும் வந்துவிடப் போகிறார்களோ என்ற பயத்துடன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பிரயாணி தம்முடைய படுக்கையைச் சிரமப்பட்டுத் தூக்கிக் காலியிடத்தில் வைத் துக்கொண்டு, வருகிறவர்களிடமெல்லாம், "ஒரு ஆள் வெளியே போயிருக்கிறது. இது அவருடைய படுக்கை"

என்று தம்முடைய மனச்சாட்சியையும் எங்களுடைய மனச்சாட்சியையும் துச்சமாக மதித்துப் பொய் சொல்லி வந்தார்.

ரயில் கிளம்பிவிட்டது. இனி செங்கற்பட்டு போனால்தான் வண்டி நிற்கும். பொய் சொல்லக் கூசாத அந்தப் பிரயாணி, படுக்கையை எடுத்துக் கீழே வைத்துவிட்டுச் சாம்பார் சாதப் பொட்டலத்தை அவிழ்த்தார்; சாப்பிட்டார்; கையைக் காகிதத்தில் துடைத்துச் சுத்தம் பண்ணிக்கொண்டு அப்படியே உட்கார்ந்துவிட்டார். அது எச்சில் கையாயிற்றே என்று அருவருப்புக்கொண்ட நண்பர் அவரை ஒட்டி உட்காராமல் ஜன்னல் பக்கமாக ஒதுங்கி உட்கார்ந்துகொண்டார்.

நான் வெற்றிலையைப் போட்டுத் துப்பிக்கொண்டே பேசிக்கொண்டிருந்தேன். எங்கள் ஊர்க்காரர் அங்கு ஒருவரும் இல்லாததால் ஊர் விவகாரங்களைப் பயமில்லாமல் பேசிக்கொண்டே வந்தோம். எங்களுடன் படித்த அந்தப் போக்கிரிப் பயல் மகாதேவன் ஒரு பெண்ணைக் காதலித்துக்கொண்டிருந்தான். இது சுத்த ஒழுக்கக் கேடான காரியம் என்று எல்லோரையும் போல நாங்களும் திட்டிக்கொண்டே போனோம். நான் சொன்னேன்: "பெண் என்றால் இந்தக் காலத்துப் பயல்கள் பேயாகப் பறக்கிறார்கள்! சுத்தக் காலித்தனம்! நாமும் அக்கா தங்கைகளுடன் பிறந்திருக்கிறோமே என்ற எண்ணமே இந்தப் பயல்களுக்குக் கிடையாது. இதற்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா? இந்தக் காலத்துப் பெண்களேதான். அந்தக் காலத்தில் ஆண்களுக்கு எதிரில் பெண்கள் வரவே மாட்டார்களாம். இப்பொழுது என்னடா என்றால், தடுக்கி விழுந்தால்..."

"இதைத்தான் சென்னை பஸ்களிலே நேருக்கு நேராகப் பார்த்தேனே! ஆனாலும், அதற்காக ஆண்கள் ஒழுக்கத்தை விட்டுவிடக் கூடாதுதான். ஆனால், அந்த மகாதேவன் பயலுக்கு யார் புத்தி சொல்லுவது? சொன்னாலும் கேட்கப் போகிறானா? அவன் அந்தப் பெண்ணையே காதலித்து, அந்தப் பெண்ணையே கல்யாணமும் செய்துகொள்ளப் போகிறானாம்! வேறு யாரையும் ஏறிட்டுக்கூடப் பார்க்க மாட்டானாம்! ஒரே பிடிவாதமாகச் சாதிக்கிறான்..."

"அயோக்கியப் பயல்!...அது சரி, அந்தப் பெண் அப்படி ஒன்றும் அழகி இல்லையே!" என்றேன் நான்.

"அழகியாக இல்லையென்றால் காதலிக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது?" என்றார் கோபாலன்.

"கூடாது என்றுதான் நானும் சொல்லுகிறேன்."

இவ்வாறு பேசிக்கொண்டே போனோம். பக்கத்தில் உட்கார்ந்திருந்த பிரயாணிகள் எங்கள் பேச்சைத் தவிர வேறு எதையும் காதால் கேட்கவில்லை. நாங்கள் பேசியதெல்லாம் அவர்களுக்கு நன்றாகத் தெரியும் அவர்களுக்குத் தெரியும் என்ற விஷயம் எனக்கும் தெரியும்; கோபாலனுக்கும் தெரியும்.

செங்கற்பட்டுக்கு இன்னும் பத்து மைல் தூரத்துக்கு மேலேயே இருந்தது. அந்தப் பத்துமைல் தூரமும் மகாதேவனைத் திட்டிக்கொண்டே போனோம். வண்டி செங்கற்பட்டுக்கு வந்தது. கதாநாயகியும் வந்து சேர்ந்தாள். நாம் உட்கார்ந்திருக்கும் வண்டிக்குத் தானே எல்லாப் பிரயாணிகளும் வருவது வழக்கம்! அந்த வழக்கப்படியே கதாநாயகரும், அவர் மூத்த மகளாகிய கதாநாயகியும், அப்புறம் அவருடைய இரண்டாவது மகளும் வந்து சேர்ந்தார்கள். மூத்த மகளைப் பார்த்த மாத்திரத்திலேயே அவள் அழகில்லை என்பதைக் கண்டுகொண்டேன். அவளை அந்த நிமிஷத்திலேயே மறந்து விட்டேன். 'இவளெல்லாம் ஞாபகத்தில் இடம் பெறக் கூடியவளா? இவளைவிட ஆயிரம் மடங்கு அழகாக இருந்த பெண்களையே நான் ஒதுக்கித் தள்ளி விட்டேனே!'

கதாநாயகருக்கு உட்கார இடம் இல்லை. என் ஜன்னலை மறைத்துக்கொண்டு நின்றார். கதாநாயகி எதிர்ப் பெஞ்சில் காலியாக இருந்த இடத்தில் உட்காரலாமா கூடாதா என்று யோசித்த வண்ணம் தகப்பனாருடைய முகத்தைப் பார்த்தாள். தகப்பனார் பெஞ்சையும் எங்களையும் பார்த்தார். ஒரு நிமிஷ ஆலோசனைக்குப் பிறகு, என் நண்பர் கோபாலனைப் பார்த்து, "ஸார்! நீங்கள் கொஞ்சம் அந்தப் பக்கம் நகர்ந்து உட்கார்ந்து கொண்டால் இவர்கள் இரண்டு பேரும் உட்கார்ந்துகொள்ளுவார்கள். கொஞ்சம் நகர்ந்து கொள்ளுகிறீர்களா?" என்று

கும்பிடாத குறையாக வேண்டிக்கொண்டார். கோபாலனும், 1 லக்கமிட்ட இடத்திலிருந்து 2 லக்கமிட்ட இடத்திற்கு வந்து விட்டார். அதுவும் போதாதென்று 2 லக்கமிட்ட இடத்தில் கால் பாகத்தைக் காலி செய்தும் கொடுத்தார். இந்த ஒன்றே கால் இடத்தில் கதாநாயகி ஜன்னலை ஒட்டியும், தங்கை அடுத்தபடியாகவும் உட்கார்ந்துகொண்டார்கள். செங்கற் பட்டு ஸ்டேஷனில் தாகத்துக்காக ஒரு சோடா வாங்கிக் குடித்தேன். வெற்றிலை பாக்குப் புகையிலையும் ஏராளமாக வாங்கிக்கொண்டேன். மதுரை வரையிலும் இந்த வெற்றிலை போதும் என்று எண்ணி மகிழ்ந்தேன். என் மகிழ்ச்சிக்கு இடையூறு செய்துகொண்டிருந்தது, மோர்மாதிரி தண்ணீராக இருந்த சுண்ணும்புதான். அது வெற்றிலையில் ஒட்டாமல் தாமரையிலைத் தண்ணீராக உருண்டு ஓடி என் வேட்டி சட்டை களை நனைத்துவிட்டது. இருந்தாலும் அடுத்த ஸ்டேஷனில் சுண்ணும்பு தயார்ப் பண்ணிக்கொள்ளலாம் என்ற திடத் துடன், ஒருமுறை வெற்றிலை போட ஆரம்பித்தேன் நான் துப்புவதற்கு வழியில்லாமல், ஜன்னலை மறைத்துக்கொண்டார் கதாநாயகர். இதற்கு என்ன உபாயம் செய்யலாம் என்று திகைத்துக்கொண்டிருக்கும்போது கோபாலன் பழைய பேச் சைத் தொடர்ந்தார். அந்தப் பயல் மகாதேவனைப்பற்றியே பேச ஆரம்பித்தார். "அந்தப் பேச்சை விடுங்கள் ஸார்" என்று எரிச்சலோடு சொன்னேன். இந்த எரிச்சலுக்கு மூல காரணம் மகாதேவனுடைய காதல் விவகாரம் அல்ல என்ப தும், துப்புவதற்கு வழியில்லாமல் கதாநாயகர் ஜன்னலை மறைத்துக்கொண்டிருந்ததுதான் என்பதும் இங்கே குறிப்பிட வேண்டிய விஷயங்களாகும். இந்தச் சந்தர்ப்பத்தில், 'ஓயா மல் பேசுவதன்மூலம் மகாதேவனையே கதாநாயகனுக்குகிறீர் களே, நான் ஒருவன் இங்கு இல்லையா? என்னைக் கதாநாயக னுக்குங்களேன்' என்று எங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளு வதுபோல எங்களிடையில் தலையை நீட்டினுர் கதாநாயகர். என் நண்பர் கோபாலனைப் பார்த்து, "ஸார், கொஞ்சம் நகர்ந்து..." என்று குழைவோடு சொன்னுர். கோபாலன் அப்படியே நகர்ந்துகொண்டார். அவர் முக்கால் இடத்திற்

குள் அடங்கி ஒடுங்கி உட்கார்ந்திருந்தாலும், காற்றுப் பட்டுச் சட்டை சற்று விலகி ஒரு அரை அங்குல அளவுக்குக் கதா நாயகியின் தங்கையினுடைய பாவாடையில் வந்து ஒட்டிக் கொண்டிருந்தது. இதைக் கண்டு சகியாத கதாநாயகர் என் நண்பரை ஒதுங்கி உட்காரச் சொன்னார். ஒதுங்கி உட்கார இடமில்லாததால் சட்டையை மட்டும் இழுத்து விட்டுக்கொண் டார் கோபாலன்.

நான் வெளிப்பார்வைக்கு மகா சாதுபோல் காணப்பட்டா லும் உண்மையில் கொஞ்சம் வம்புக்காரப் பேர்வழிதான்; தக ராறு வந்தால் லேசில் விடமாட்டேன். என் நண்பர் கோபா லனோ நல்லவனுக்கு நல்லவர்; ரௌடிக்கு ரௌடி. 'என்னடா, இந்தக் கதாநாயகர், கோபாலனைத் தீண்டத் தகாதவராக நினைத்து விட்டாரா? அப்படியே நினைத்தாலும், ரயிலில் இப் படி வித்தியாசம் பார்ப்பது கிடையாதே! இவர் புரம வைதீகம் பிடித்தவராகத்தான் இருக்கவேண்டும். போகட்டும். வயதில் மூத்தவர். சொன்னபடி கேட்போம்' என்று நினைத்து, எதை யும் பொருட்படுத்தாதவன்போல நான் உட்கார்ந்திருந்தேன். இருந்தாலும் மனம் நிம்மதியடையவில்லை. அது என்னென் னவோ நினைத்தது. 'சட்டை உரசினால் ஜாதி கெட்டுவிடுமா? இல்லை...இவர் சுத்த அதிகப்பிரசங்கியாக இருக்கவேண்டும். இது உலகத்தில் இல்லாத புதுமையாக இருக்கிறதே!' என்று மனத்தினுள் கோபப்பட்டேன். கதாநாயகரை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தேன். அவருக்கு வயது நாற்பதிருக்கும். கிராப் தலை; சிவப்பான ஆள்; பள்ளிக்கூடத்திலும் கல்லூரி யிலும் படித்தவர் என்பதைத் தெரிவிக்கும் முகத் தோற்றம். வெள்ளை ஜிப்பா; வெள்ளை வேட்டி. நடுத்தர உயரம்; நடுத்தர கனம்.

அப்புறம் கதாநாயகியைப் பார்த்தேன். அவளுக்கு வயது அதிகமாய்ப் போனால் பதினான்குதான் இருக்கும். ஆனால் வயது வராத பெண். வயது வந்த பெண்ணைப்போல மேலாக் குப் போட்டு உடை உடுத்தியிருந்தாள். நாணம், வெட்கம் முதலியவையெல்லாம் வயது வந்த பெண்ணுக்கு இருப்பதை விட அதிகமாகவே இருந்தன. இருந்துவிட்டுப் போகட்டும்.

அதைப்பற்றிக் கவலையில்லை. இவளை நான் காதலிப்பதாக இல்லை; என் நண்பரும் அப்படியே. சிவப்பு உடம்பு; நீண்ட முகம்; நல்ல முகக் களை; ஒற்றை நாடி உடல். முக்கால் வாசி நேரமும் ரயிலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருப்பதில் விருப்பம்.

கதாநாயகியின் தங்கைக்கு வயது ஏழுக்குமேல் நிச்சயம் இராது. பாவாடையும் சட்டையும் போட்டிருந்தாள். பார்த்தால் ஏதாவது பலகாரம் வாங்கிக் கொடுக்கவேண்டும் என்று தோன்றும். அந்தக் குழந்தை அவ்வளவு அழகாக இருந்தது. என் தங்கையைக் காட்டிலும் அழகு. செளகரியத்தை உத்தேசித்து இவளுக்கு ராஜி என்று பெயர் வைத்துக்கொள்ளுவோம்.

ரயில் போய்க்கொண்டிருந்தது. முப்பது மைலாவது போயிருக்கும். கோபாலனின் சட்டை பழையபடியும் ராஜியின் பாவாடையை உரசியது. இதை மிகக் கவனமாகப் பார்த்துக்கொண்டார் கதாநாயகர். உடனே கோபாலனைப் பார்த்து, ''ஸார். கொஞ்சம்...'' என்று உஷார்ப்படுத்தினார். கோபாலன் முன்போலவே சட்டையை இழுத்து விட்டுக் கொண்டார்.

எனக்கு மிகவும் கோபம் வந்துவிட்டது. அவர் மேல் 'வள்' என்று விழுவோமா என்று நினைத்தேன். ஆனால், ரயிலின் கடாபுடா முழக்கத்தில் என் கோப முழக்கம் அமுங்கிவிடும் என்பது ஒருபுறமிருக்க, வாயைத திறப்பதற்கு வழியில்லாமலும் இருந்தது. வாய்நிறையப் புகையிலைச் சாறு. துப்புவதற்கு வழியில்லாமல் போகவே, பலூன் பருப்பது போல வாய் புடைத்துக்கொண்டும் வேறு இருந்தது. இருந்தாலும் கோபத்தைக் காட்டுவதற்கு ஏதேனும் செய்தாக வேண்டும் என்று கதாநாயகரைப் பார்த்து, ''ஷார்! இப்படி வந்து உக்காருங்கேளன்'' என்று அண்ணாந்து மேலே பார்த்துக்கொண்டே சொன்னேன். கொஞ்சம் ஜன்னல் பக்கமாக நகர்ந்து உட்கார்ந்து கொண்டேன். எனக்கும், என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு பிரயாணிக்கும் நடுவே வந்து உட்கார்ந்தார் கதாநாயகர். அவர் உட்காருவதற்கு முன்பே நான் எழுந்து ஜன்னல் வழியாகத் தலையை நீட்டி, முடிகிற மட்டும் குப்புறக் குனிந்து

வெற்றிலைச் சாரத்தைத் துப்பினேன். பிறகு வந்து உட்காரப் போகும்போது என் இடத்தில் பாதியைக் கதாநாயகர் அடைத்துவிட்டார் என்பது தெரிந்தது. கடைசியில் நான் தான் ஒண்ட வந்த நாய் மாதிரி பெஞ்சு நுனியில் தொடுக்கிக் கொண்டு உட்கார்ந்துகொள்ள நேர்ந்தது. எனக்கு அப் பொழுது என்ன கோபம் தெரியுமா? ரயில் போய்க்கொண் டிருந்தது.

''அந்தப் பயல் பார்ப்பதற்குக் கௌரவமாகத்தான் இருக் கிறான் ஸார். அவன் யோக்கியன் மாதிரி நடப்பது ஒன்றே போதும், அவன் பரம அயோக்கியன் என்பதைக் காட்ட'' என்று கோபாலனிடம் மகாதேவனைப்பற்றிச் சொன்னேன். ஆனால் மகாதேவனைப்பற்றிச் சொன்னேன் என்பதைவிடக் கதாநாயகரைப்பற்றிச் சொன்னேன் என்பதுதான் பொருத் தம். கதாநாயகர் மட்டும் இங்கே இல்லை என்றால் மகாதேவனை இப்படித் திட்டியிருக்க மாட்டேன். இதைப் புரிந்துகொண்டு தானோ என்னவோ கோபாலன் விழுந்து விழுந்து சிரித்தார்; ஒரு தினுசாகப் பேசவும் ஆரம்பித்தார்.

''சுத்தப் போக்கிரிப் பயல் என்பதுதான் பார்த்த மாத் திரத்திலேயே தெரிகிறதே'' என்று கதாநாயகரைப் பார்த்துக் கொண்டே சொன்னார்.

இப்பொழுது நான் சிரித்தேன். கதாநாயகர் எங்கள் இருவரையும் மாற்றி மாற்றிப் பார்த்தார். முகம் 'குர்' என்று இருந்தது. 'நீர் இப்படிப் பார்த்துப் பிரயோஜனம் இல்லை. ஏன் அனாவசியமாகப் பார்க்கிறீர்? உம் மகளை நாங்கள் காதலித்தோமா? உம் மகள் அப்படி ஒன்றும் பூலோக ரம்பை யல்ல. இதைவிட அழகிகளை எல்லாம் நாங்கள் கழித்துக் கட்டியிருக்கிறோம்' என்று சொல்லுவதுபோலக் கோபாலன் அவரைப் பார்த்தார். பார்த்துவிட்டுப் பையிலிருந்து மூன்று ஆரஞ்சுப் பழங்களை எடுத்தார். எனக்கு ஒன்று கொடுத்தார்; தமக்கு ஒன்று வைத்துக்கொண்டார்; ராஜிக்கும் ஒன்று கொடுத்...இல்லை கொடுக்கப் போனார்.

''வேண்டாம் வேண்டாம்'' என்று கையினால் மறியல் செய்தார் கதாநாயகர்.

“இல்லை ஸார், குழந்தைதானே?” என்றேன் நான்.

“வேண்டாம்” என்று வைராக்கியமாகச் சொன்னார் க. நா. (கதாநாயகர்).

கோபாலன் அதிக வைராக்கியத்துடன் குழந்தைக்குக் கொடுக்கப் போனார். கதாநாயகர் இருப்பிடத்தை விட்டு எழுந்துவிட்டார். குழந்தை கைநீட்டி வாங்கிக்கொண்டது. அதை உடனே ‘வெடுக்’கென்று பிடுங்கிக் கோபாலன் கையில் கொடுத்துவிட்டார் க. நா. எங்களுக்கு அவமானமாக இருந் தது. மற்றப் பிரயாணிகளுக்கு மத்தியில் எங்கள் கௌர வத்தை விட்டுக் கொடுக்காமல், “குழந்தை விஷயத்தில் நீங் கள் இப்படி இருக்கக்கூடாது ஸார்” என்று ஒருமுறை சொல்லி வைத்தேன். எங்களுக்கு ராஜியின் முன்னிலையில் பழத்தை உரித்துச் சாப்பிட மனம் வரவில்லை. “அப்புறம் சாப்பிட்டுக் கொள்ளலாம்” என்று கோபாலனும் சொன்னார். பழங்களைப் பழையபடியும் பையில் வைத்துவிட்டோம். நாங்கள் கொஞ்சம் போக்கிரிகளானாலும் இவ்வளவுதூரம் நாகரிகமாக நடந்து கொண்டோம். கௌரவமானவர்களைப் போல எதிரே குழந் தையை வைத்துக்கொண்டு சுளை சுளையாக உரித்துச் சாப்பிட விரும்பவில்லை.

சுமார் பதினைந்து நிமிஷமாயிற்று. கதாநாயகருக்குத் தூக்கம் வந்துவிட்டது. ஆனால் தூங்குவதற்குப் பயம் என் பதை அவருடைய முகஜாடை காட்டியது. இரண்டு ஓநாய் களுக்கு மத்தியில் இரண்டு மான்குட்டிகளை ஒப்படைத்து விட்டுத் தூங்கலாமா என்று நினைத்தார்போலிருக்கிறது! நான் சும்மா இராமல் “தூக்கம் வந்தால் வெற்றிலை போடுங்கள் ஸார். இதையும் வேண்டாம் என்று சொல்லிவிடுவீர்களோ!” என்று சிரித்துக்கொண்டே சொன்னேன். உண்மையில் இது நாசூக்குச் சிரிப்பல்ல; கேலிச் சிரிப்புத்தான். க. நா. “வேண் டாம்” என்றே சொன்னார். ‘நான் வெற்றிலை போடுவதில்லை. தேங்க்ஸ்’ என்று சொல்லவில்லை. ஒருவேளை கௌரவமான வர்களிடம் அவர் அவ்வாறு சொல்லக்கூடும்...நான் கேவலம் எண்பது ரூபாய் குமாஸ்தா; என் நண்பர் நாற்பது ரூபாய் வாத்தியார்...

இருக்க இருக்கக் கதாநாயகர் கனத்துக்கொண்டு வந்தாரோ என்னவோ, நான் உட்கார்ந்திருக்கும் உள்ளங்கை இடமும் கரைந்துகொண்டே வந்தது. கடிகாரத்தின் மணி முள் மாதிரி யாரும் அறியாத நிலையில் என் இருப்பிடத்தை நோக்கி அவ்வளவு சாவதானமாக நகர்ந்துகொண்டிருந்தார் க. நா. எனக்குக் கோபம் அதிகமாகிவிடவே, எழுந்து, கீழே இருக்கும் அவருடைய பெட்டிகளின்மேல் உட்கார்ந்துவிட்டேன். அவர் அதைத் தப்பு என்று சொல்லவில்லை. இதைக் கவனிக்காதவர் போலக் கொஞ்சநேரம் இங்கும் அங்கும் பார்த்துவிட்டு, அப்புறம் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டார். பெஞ்சில் இனி ஒரு ஈ உட்காரக்கூட இடமில்லை.

நான் கீழே உட்கார்ந்திருந்ததும், எனக்கு எதிரே கதா நாயகி பெஞ்சுமேல் உட்கார்ந்திருந்ததும் எனக்கு ஒரு நாடகக் காட்சியை ஞாபகமூட்டியது. அதாவது, பழங்காலத்தில், சிம்மாசனத்தில் இருக்கும் காதலியிடம் காதலன் மண்டியிட்டுக் கெஞ்சிக் காதல் பிச்சை கேட்கும் காட்சியையே ஞாபகமூட்டியது. 'இந்தப் பெண்ணுக்கு அவ்வளவு கௌரவமா?' என்று நினைத்து மறுபுறம் திரும்பிக்கொள்ள நினைத்தேன். அப்போது கோபாலன், "ஸார், வெற்றிலை இருந்தால் கொடுங்கள்" என்று கையை நீட்டினார். நீட்டிய மாத்திரத்தில் சட்டையின் வலதுகை காற்றின் காரணமாக எதிர்பாராத விதமாக ராஜியின் கன்னத்தை உரசவே கதாநாயகர் வெகுண்டெழுந்தார்.

"என்ன ஸார் இது, லேடீஸ் என்கிற மரியாதைகூடக் கிடையாதா? கொஞ்சம் நகர்ந்து உட்காருவதற்கும் வழியில்லை; பரவாயில்லை என்று இருந்தால் ரொம்பவும்..."

"ரொம்பவும் என்ன ஸார்! ரொம்பவும் என்ன?" என்று பயங்கரமாகக் கேட்டார் கோபாலன். சரி, நண்பர் 'ரௌடிக்கு ரௌடி'யாகிவிட்டார் என்பதை அறிந்து, "கோபாலன்! உஸ், ஏன் சத்தம் போடுகிறீர்கள்?" என்று தடுத்து நிறுத்தினேன். கோபாலன் அடங்கிவிட்டார். கதாநாயகர் மட்டும் எதையோ முணுமுணுத்துக்கொண்டிருந்தார்.

'இவர் எங்களை என்னவென்று நினைத்துவிட்டார்? இல்லை, தம் அருமைக் குமாரிகளைத்தான் என்னவென்று நினைத்து விட்டார்? ஒன்று குழந்தை; மற்றொன்று வயது வராத பெண். நாங்கள் மனதால்கூட இருவர்மீதும் வேறுவிதமாக ஆசைப் படவில்லை. அப்படியிருக்க, எங்கள் மனத்தில் என்ன என் னவோ விஷயங்களை ஞாபகப்படுத்துகிறார் இந்த முட்டாள் மனிதர். நாங்கள் இந்த இருவரையும் காதலிக்கப்போவதே இல்லை. அதிலும் ஒன்று பச்சைக் குழந்தை. இந்தக் குழந் தையை விட்டுவிட்டுப் பழம் சாப்பிடக்கூட நாங்கள் விரும்ப வில்லை. குழந்தையின் பால்வடியும் முகத்தைப் பார்த்ததும், இதற்கு ஏதாவது பரிசு கொடுத்தால் தேவலை என்றுகூட எனக் குத் தோன்றியது. இந்தக் குழந்தையைப்பற்றி எந்த அயோக் கியனும் வேறுவிதமாக நினைக்க முடியுமா? இதைப்பற்றி நினைப்பதுகூட ஆபாசமாக இல்லையா? எங்களுக்கே ஆபாச மாக இருக்கும்போது, பெற்ற தகப்பனுக்கு எப்படி இருக்க வேண்டும்? தகப்பனார் உள்ளத்தில் இந்த எண்ணம்தான் உதிக்குமா?' என்று பலவாறாக நான் நினைத்தேன். அப்புறம் சிந்தனை வேறுவிதமாகத் திரும்பியது:

'ஒருவேளை பெரிய பெண்ணை முன்னிட்டுத்தான் இவ் வளவு 'கார்பார்' நடக்கிறதோ? இருந்தாலும்தான் என்ன? அதற்கும் கோபாலனுக்கும் நடுவில், ஒரு ஏழுவயதுக் குழந்தை உட்கார்ந்திருக்கிறதே! கோபாலனின் உடம்பில் காந்தமா இருக்கிறது, ஆளை ஊடுருவிக்கொண்டு அடுத்த ஆள்மீது பாய? அதுவும் சட்டை பட்ட மாத்திரத்தில்...சீச்சீ...இந்த முட்டாள் மனிதனுக்காக நாமும் இப்படிப்பட்ட யோசனைகள் செய்யக்கூடாது.'

கோபாலனுக்கு வெற்றிலையைக் கொடுத்தேன். ரயில் போய்க்கொண்டிருந்தது.

கதாநாயகருக்குப் பதிலாகக் கதாநாயகி தூங்கிவிட்டாள். தூங்கி விழும்போது சாமியாடுவதுபோல இருக்கும் அல்லவா? அத்துடன் அது சில சமயங்களில் ஹாஸ்ய ரசனையைக் கிளப் பக்கூடியதாகவும் இருக்கும். இருந்தாலும் இளம்பெண் தூங்கி விழுவதைக் கண்டு சிரிப்பது தப்பு என்று வாயை மூடிக்

கொண்டு இருந்தேன். ஆனால் ராஜி சும்மா இருந்தாளா? சும்மா இருக்கவில்லை. ''அப்பா! அப்பா!'' என்று சிரித்துக் கொண்டே அப்பாவைக் கூப்பிட்டாள். அப்பா மிடுக்காகத் திரும்பிப் பார்த்தார். ''அக்காவைப் பார்'' என்று விரலால் சுட்டிக் காட்டிவிட்டுச் சிரித்தாள். கதாநாயகருக்கு அளவு கடந்து கோபம் வந்துவிட்டது. நான்குபேருக்கு மத்தியில் அக்காளைக் காட்சிப் பொருளாக மாற்றியதற்காக ராஜியின் மீது அவருக்குப் பொல்லாத கோபம் வந்துவிட்டது. கண்களை உருட்டி விழித்து, ''இதோ! சும்மா இருக்க முடியவில்லையா?'' என்று அதட்டினார். விளையாட்டில் தந்தையும் வந்து கலந்து கொள்ளுவார் என்று குழந்தை எதிர்பார்த்தது நேருக்கு மாருக முடிந்தது. ராஜி பயந்துவிட்டாள்; அவமானத்தால் முகம் செத்துப் போய்விட்டது. இதைப் பார்க்க எனக்கும் பரிதாப மாக இருந்தது. ஆனால் இதே விஷயத்தைக் கோபாலனிடம் தெரிவிப்பது எப்படி? பழையபடியும் அந்த மகாதேவனை வைத் துக்கொண்டே காரியத்தைச் சாதிக்க நினைத்தேன்.

''கோபாலன்! மகாதேவன் ஒரு முரடன். படித்திருக் கிறான் என்றாலும் பயன் என்ன? உலகத்தில் எத்தனையோ முழு மூடர்களும்தான் படித்திருக்கிறார்கள். தடிப்பயலுக்கு இங் கிதமே தெரியாது; வேடிக்கை விளையாட்டும் தெரியாது. அவ னைப் போன்ற பயல்களைக் காட்டிலும் வெட்டிப் போட்ட மரக் கட்டை எவ்வளவோ மேல்...''

கோபாலன் என் குறிப்பை உணர்ந்து தம் பேச்சை ஆரம் பித்தார்: ''கேலியாக எதுவும் சொல்லப் போனால் அவனுக்கு அவமானமாக இருக்கிறது. உடனே நாயைப்போல் 'வள்' என்று விழ ஆரம்பிக்கிறான். இந்த அழகில் அவன் பெரிய மனிதன் வீட்டுப் பிள்ளையாம்!...''

கதாநாயகர் எங்கள் பேச்சைக் கவனித்தும் கவனிக்காத வர் போல நடந்துகொண்டார். தம் மூத்த மகளை உரக்கக் கூவி அழைத்து, ''அதற்குள்ளே என்ன தூக்கம்? ஒருநாள் இரவுகூட விழித்திருக்க முடியாதா?'' என்றார். அவர் பேசியது பயமுறுத்துவது போல இருந்தது.

கதாநாயகி சிவந்த கண்களைத் திறந்து சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டாள். பிறகு கதாநாயகருக்குப் பயந்து, விழித்த கண்களை மூடாமலே இருந்தாள்.

'அடடே! இவர் மட்டும் இரவு முழுவதும் விழித்துக் கொண்டிருந்து விடுவாரோ? பார்ப்போமே சமர்த்தை!' என்று மனதிற்குள் சொல்லிக்கொண்டேன். எனக்கு அவரைப் பார்த்து, 'ஐயா! உம் மகளும் தூங்கட்டும்; நீரும் தூங்கலாம். இங்கே பயம் ஒன்றுமில்லை. ரயிலில் இத்தனை பேர் இருக்க நாங்கள் தப்பாக நடந்துகொள்ள மாட்டோம் இத்தனை பேர் இல்லாவிட்டாலும் நாங்கள் தப்பாக நடந்துகொள்ள மாட் டோம். ஏனென்றால் உம் மகள்மீது எங்களுக்கு எள்ளத்தனை காதல்கூடக் கிடையாது. இப்படிப்பட்ட பெண்களை நாங்கள் காதலிக்கத் தயாராக இருந்திருந்தால் எங்களுக்கு என்றோ கல் யாணம் ஆகியிருக்கும். இதைத் தெரிந்துகொள்ளும்' என்று சொல்லவேண்டுமென்று ஆசை. ஆனால் சொல்லவில்லை.

ரயில் விருத்தாசலம் வந்து, விருத்தாசலத்தையும் தாண்டி விட்டது. ரயிலில் ஏறக்குறைய எல்லோரும் தூங்கிவிட்டார் கள். கோபாலனுக்கும் அரைகுறைத் தூக்கமே. கதாநாயகி தூங்கியதுடன் மட்டுமல்லாமல், ஆடிக்கொண்டும் இருந்தாள். ராஜி என் நண்பரின் தோள்மீது தலைவைத்துத் தூங்கி விட் டாள். இதைக் கதாநாயகர் தடுக்காததன் காரணம், அவரும் தூங்கிவிட்டதுதான். 'ஐயா வீருப்புப் பேசுகிறீரே, இப் பொழுது என்னவாயிற்று?' என்று மனதிற்குள் கும்மாளம் போட்டேன். சிறிது நேரத்தில் எப்படியோ விழித்துக்கொண் டார்; 'வந்ததடா மோசம்!' என்று திடுக்கிட்டு எழுந்து ராஜியை நிமிர்த்தி உட்கார வைத்தார். ஆனால் ராஜி வாடித் துவளும் செடிபோலப் பழையபடியும் கோபாலன் தோள்மீதே சாய்ந்தாள். கதாநாயகர் எழுந்தார். தம் மேல்துண்டைக் கீழே விரித்து அதில் ராஜியைப் படுக்கப் போட்டார். அப் புறம், கதாநாயகிக்கும் கோபாலனுக்கும் மத்தியில் உண்டான இடைவெளியை எப்படி அடைப்பது என்று வெகுநேரம் யோசனை செய்துவிட்டு, என்னை எழுந்து நிற்கச் சொன்னார். நான் அப்படியே செய்தேன். எனக்குக் கீழே கிடந்த பெட்டி

களில் ஒன்றைத் தூக்கி அந்த இடைவெளியில் வைக்கப் போனார். ஆனால் அந்தப் பெட்டிக்கு இடம் பற்றவில்லை. கதா நாயகியோ, கோபாலனோ யாராவது ஒருவர் தம் இடத்தைக் காலி செய்தாலொழியப் பெட்டிக்கு அங்கே இடம் இராது என்பது தெளிவாகிவிட்டது. பெட்டியைவிட அதிக அகலமுள்ள கதாநாயகரின் உடம்புக்கும் அந்த இடம் போதாதுதான். அதனால் அவரும் போய் அங்கே உட்கார முடியாது. என்ன செய்வது? கதாநாயகியை எழுப்பி நகர்ந்து உட்காரச் சொன்னார். அவள் நகரும்போது ஒரு அங்குல இடம் காலியானது; ஆனால் நகர்ந்து, உட்கார்ந்தபோது அந்த இடம் அடைபட்டுப் போய்விட்டது. கதாநாயகர் கோபாலனையும் எழுப்பி, நகர்ந்து உட்காரச் சொன்னார். கோபாலனுக்கோ அரை அங்குலம் நகருவதற்குக்கூட இடமில்லை. தன்னைத் தூக்கத்திலிருந்து தட்டி எழுப்பி, பெட்டியைத் தூக்கி வைப்பது எதற்கு என்று புரியாமல், "ஏன் நகர்ந்து உட்காரவேண்டும்?" என்று கடுஞ் சினத்துடன் கேட்டார் கோபாலன்.

"பெட்டியை அப்படியே வைத்துவிடுவோம்."

"வைக்காவிட்டால் என்ன?"

"அதை உங்களுக்கு விளக்கவேண்டிய அவசியமில்லை"

"நான் நகர்ந்து உட்காரவேண்டிய அவசியமும் இல்லை"

"அவசியம் இல்லையா?"

"என்ன ஐயா, மிரட்டுகிறீர்? நகருவதற்கு இடம் எங்கே இருக்கிறது?"

"பெண்களுக்குக் கௌரவம் கொடுக்கவேண்டும். போக்கிரித்தனமாகப் பேசக் கூடாது."

கோபாலன் கோபம் பொறுக்காமல் நிமிர்ந்து உட்கார்ந்து, "வாயை மூடு ஐயா! எனக்கும் உம் மகளுக்கும் நடுவில் ஒரு முழம் காலியாக இருக்கிறது. நான் மரப் பலகையில் உட்கார்ந்திருப்பதால் மின்சாரம் என் உடம்பிலிருந்து அங்கே பாய்ந்துவிடாது. தெரிந்ததா?" என்று கத்தினார்.

வண்டியிலிருப்பவர்கள் சமாதானம் செய்ய முயன்றார்கள். பொது இடங்களில் பெண் கட்சியில்தான் ஆள் சேரும் என்ற

தைரியத்துடன் கதாநாயகர் தம் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்துவிட்டார்.

"அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசக்கூடாது" என்று எச்சரித்தார் கதாநாயகர்.

பக்கத்திலிருப்பவர்கள் கோபாலனையும் கதாநாயகரையும் இடம் மாற்றி அமரச் சொன்னார்கள். நானும் அதை ஆமோதிக்கவே கோபாலன் ஒப்புக்கொண்டார்.

வண்டி ஓடிக்கொண்டிருந்தது. எல்லோருக்கும் மட்டுக்கு மிஞ்சிய தூக்கம். அதனால் அரைமணி நேரத்தில் பழையபடியும் தூங்கிவிட்டார்கள். கதாநாயகரும் தூங்கிவிட்டார். கலவரம் நடந்த ஞாபகமே அந்த இடத்தில் இல்லை. விருத்தாசலத்துக்கும் திருச்சிராப்பள்ளிக்கும் நடுவே பாதி தூரத்தில் ரயில் வந்துகொண்டிருந்தது. கதாநாயகி, கதாநாயகிக்குரிய முக்கியமான பங்கை நிறைவேற்ற முற்பட்டாள். அப்பொழுது நான் ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக்கொண்டிருந்தேன். நான் கொஞ்சங்கூட எதிர்பாராதவாறு கதாநாயகி என்மீது 'தொப்'பென்று விழுந்தாள். நான் மட்டும் கை கொடுத்துத் தாங்கியிராவிட்டால் பெஞ்சின்மீது முட்டிக் கதாநாயகிக்கு ஏதேனும் அபாயம் நேரிட்டிருக்கும். அவளைக் கையினால் தாங்கி மேலே தூக்கினேன். இந்தச் சந்தடியில் அங்கு உட்கார்ந்திருந்த பாதிப்பேர் விழித்துவிட்டார்கள். கதாநாயகரும் விழித்தெழுந்தார்.

அவள் உறக்கத்தில் குப்புற விழுந்துவிட்டாள் என்று நான் சொல்லியும் அவர் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. வாய்க்கு வந்தபடி என்னை அயோக்கியன் என்றும் போக்கிரி என்றும் திட்டினார். உண்மையை நான் எடுத்துச் சொல்லியும் அவர் கேட்காமல் மேலும் மேலும் திட்டிக்கொண்டே இருந்தார். பக்கத்தில் இருந்தவர்கள் என் கட்சியை ஆதரித்தார்கள். பெண்களிடத்திலே அயோக்கியத்தனமாக நடந்து கொள்ளும் தடியன் என்று க. நா. என்னைத் திட்டினார். உடனே கோபாலன் 'ரௌடி'க் கோலத்தைக் காட்ட ஆரம்பித்துவிட்டார். கொச்சை வார்த்தைகளினால் திட்டிக் கொண்டே கதாநாயகரை அடிப்பதற்கு எழுந்தார். ரயிலில்

உள்ளவர்கள் நடுவே பாய்ந்திராவிட்டால் கதாநாயகர் சோக நாடகத்தின் கதாநாயகராகி யிருப்பார். நல்ல வேளையாக அப்படி ஒன்றும் நடந்துவிடாமல் தடுத்துவிட்டார்கள். ஆனால் பரஸ்பரம் திட்டிக்கொண்டிருந்தார்கள். ''சமையாத பெண்ணுக்கு இந்தப் பாடு என்றால் சமைந்த பெண்ணுக்கு எந்தப் பாடு!'' என்றும் கோபாலன் சொன்னார். நானும் சும்மா இருக்கவில்லை. கதாநாயகரைப் பார்த்து, ''உம் பெண்மீது துளிக்கூட எங்களுக்கு மோகம் கிடையாது. அதனால் அவளைக் கல்யாணம் செய்துகொள்ள மாட்டோம். அவளிடம் ஒழுக்கக் கேடாக நடப்போம் என்றும் எதிர்பார்க்க வேண்டாம். அவள் வயது வராத சிறு பெண். எங்களைப் பொறுத்த மட்டிலும் அவள் நேற்றுப் பிறந்த பெண்ணுக்குச் சமம்தான். இப்பொழுதாவது புரிந்ததா? இனிமேல் வாலாட்டினால் ஒட்ட அறுத்து விடுவேன். ஜாக்கிரதை!'' என்று ஒரு போடு போட்டுவிட்டு உட்கார்ந்தேன்.

சண்டை வலுக்க ஆரம்பித்தது. அங்கிருந்தவர்களில் எங்களைவிடப் பலசாலிகள் சிலர் இருந்ததால், தம் பலத்தை எல்லாம் பிரயோகித்து எங்கள் சண்டையை நிறுத்திவிட்டார்கள். அவர்களைத் தள்ளிவிட்டுக் கைவரிசையைக் காட்ட எங்கள் உடம்பில் பலமில்லை. கை பயனற்றுப் போகவே இருசாராரும் சிறிது நேரம் வாய் பலத்தை மட்டும் உபயோகித்துக்கொண்டோம்.

அப்படி இப்படி என்று வண்டி திருச்சிராப்பள்ளிக்கு வந்துவிட்டது; கதாநாயகரும் தம் புதல்விகள் சகிதமாக வண்டியைவிட்டு இறங்கினார். எங்களை அடிப்பதற்குக் கையாட்கள் தயார்ப்பண்ணிக்கொண்டு வரப்போகிறவர் போல வேகமாகவும், செருப்புச் சத்தம் காதைப் பிளக்கும்படியாகவும் நடந்து சென்றார். அவர் அப்புறப்பட்டது உடம்பில் ஒட்டிய சேற்றைக் கழுவிவிட்டதுபோல் இருந்தது எனக்கு. எங்களுடன் வந்த சில பிரயாணிகளும் இறங்கி விட்டார்கள். திருச்சிராப்பள்ளியை விட்டு வண்டி புறப்பட்ட மறுநிமிஷத்தில், நான் அந்தக் கதாநாயகரைப் பற்றிக்

கேவலமாய்ப் பேசவேண்டும் என்று விரும்பிப் பேச்சை ஆரம் பித்தேன்.

கோபாலன் சொன்னார்: "இந்தப் பயல் ஒரு தகப்பன் தானா? மகள் சும்மா இருக்கிறாள்; நாமும் சும்மா இருக்கிறோம். இந்த இருவருக்கும் நடுவில் ஆபாசமான முடிச்சைப் போடு கிறானே இந்த ஆபாசக் களஞ்சியம்! நான் சத்தியமாகச் சொல்லுகிறேன், எனக்கு அப்படிப்பட்ட எண்ணமே தோன்ற வில்லை. ஆனால் இவன் மேலும் மேலும் அதை ஞாபகப்படுத் திக்கொண்டு வரவே, நான் மனத்தில் பல விஷயங்களைக் கற் பனை பண்ணிப் பார்க்கும்படி ஆய்விட்டது."

"என்ன விஷயங்களை?"

"அதை வெளியே சொல்ல முடியாது. இத்தனை ஆபாசத் துக்கும் காரணம் இந்த ஆபாசக் களஞ்சியம்தான். தகப்ப னுக்கு மகளைப் பார்த்தால் மகளைப்போலக் காட்சியளிப்பாளா? காமக் கருவியாகக் காட்சியளிப்பாளா? இதெல்லாம் காலத் தின் கோலம் ஐயா!" என்று சொல்லிவிட்டுக் கோபாலன் சிரித்தார்.

கதாநாயகரை இரண்டு அடியாவது அடித்திருக்கவேண் டும் என்று எனக்குத் தோன்றியது. இவன் தகப்பனா? இவள் மகளா? ராஜியைக் கூட அவன் அப்படித்தானே நினைத் திருக்கிறான்! இல்லை என்றால் என் நண்பரின் சட்டை அவள் மீது உரசியதற்காக அப்படித் துள்ளி விழுந்திருப்பானா? கோபாலனைப் பார்த்து நான் சொன்னேன்: "இவனைப்போலக் கீழ்த்தரமான பயலைவிட நம் மகாதேவன் பயல் எத்தனையோ மடங்கு உயர்ந்தவன்."

"அவன் தங்கம் அல்லவா? தக்க வயதுள்ள ஒரு பெண்ணை அவன் காதலித்தான். அதில் தப்பு ஏதாவது உண்டோ? அவள் அந்நியப் பெண்; பெற்ற மகளல்ல! கல்யாணம் செய்து கொள்ளும் தகுதியுடைய ஒரு பெண்தான் அவள். அவனுக்கு அவள் காமக் கருவியாகத் தோன்றியிருந்தாலுங்கூடக் குற்ற மில்லை என்று சொல்லுவேன். ஆனால் தகப்பனுக்கு மகள் அப் படித் தோன்றலாமா?..."

கோபாலன் தம் பேச்சை முடிக்கு முன்பே நான் சொன்னேன்: ''கோபாலன்! அந்தப் பேச்சை விடுங்கள். ஆரஞ்சுப் பழத்தை எடுங்கள், சாப்பிடலாம்.''

# ஆண்மகன்

"ரங்கா! வேலை எப்படி இருக்கிறது? வீட்டுக்காரரின் குணம் எப்படி?" என்று விசாரித்தான் மன்னார்குடி வெங்கு.

"வீட்டுக்காரரின் குணம் எப்படி இருந்தால் என்னடா? வீட்டுக்காரியின் குணந்தானே நன்றாக இருக்கவேண்டும்! அதனால் அதைப்பற்றி விசாரி" என்றான் காஞ்சிபுரம் கிருஷ்ணன்.

உடனே ரங்கசாமி பேச ஆரம்பித்தான்: "வீட்டுக்காரர் தங்கமானவர்; வீட்டுக்காரி தங்கக் கம்பி. ஆனால், வேலை கொஞ்சம் அதிகந்தான்."

"என்னப்பா அப்படி வேலை!"

"காலையில் வேலைக்காரி வந்து பாத்திரங்களைத் தேய்த்துக் கொடுத்துவிடுகிறாள். ஆனால் ராத்திரியில் நான் தான் தேய்த்துவைக்க வேண்டியிருக்கிறது. அதுமட்டுமில்லாமல் என்னையே காப்பிப் பொடி இடிக்கும்படியும் சொல்லுகிறார்கள்."

"இது ஒரு கஷ்டமான வேலையா? நாங்களுந்தான் ஏக தேசமாக இப்படிப்பட்ட வேலைகளைச் செய்கிறோம். நாளாரம்பத்தில் எல்லாம் சரியாய்ப் போய்விடும்" என்று சொல்லிவிட்டுத் திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தவன் போல, "ரங்கா! உன்னை ஒரு விஷயம் கேட்கவேண்டுமே! அந்த வீட்டில் இரண்டு குட்டிகள் உண்டே, அவர்கள்...அவர்கள் எப்படி?" என்று கேட்டான் வெங்கு. உடனே கிருஷ்ணனின் இடுப்பில் குறும்புத்தனமாக விரலால் அழுத்தினான். கிருஷ்ணன் சிரித்தான்.

வெங்கு எப்பொழுதுமே இப்படிக் குறும்பாகப் பேசுவது வழக்கம்; சில சமயங்களில் ரசாபாசமாகக்கூடப் பேசுவான். அவனுடைய வாயை என்னால் அடக்க முடியாது என்பது இரண்டு வருஷங்களுக்கு முன்பே தெளிவான சமாச்சாரம். அதனால், 'எப்படியும் குட்டிச்சுவராகப் போங்கள்!' என்று

மனதுக்குள் சபித்துக்கொண்டு புல்லின்மேல் படுத்துவிட்டேன்.

"நல்ல பெண்கள். இருக்கிற இடமே தெரியாது" என்ருன் ரங்கன்.

"இருக்கிற இடமே தெரியாதா? அப்படியானல் அவர்களுடைய காரியாதிகளும் தெரியாது!" என்று வெங்கு சொன்ஞன்.

"சேச்சே! அப்படியெல்லாம் அநியாயமாகச் சொல்லக் கூடாது. அவர்கள் முகத்தைப் பார்த்தாலும் போதும், அவர்களைச் சந்தேகப்பட முடியாது...இன்று நான் சாப்பாடு பரிமாறும்போது ஒரு வார்த்தைகூட என்னேடு அவர்கள் பேசவில்லை. இதுவல்லவா பெண்களுக்கு லக்ஷணம்! நாகரிகம் என்று சொல்லிக்கொண்டு ஊர்ப்பயல்களோடு உட்கார்ந்து அரட்டையடிக்கும் குணத்தை அவர்களிடம் பார்க்கவே முடியாது. பெரிய இடத்துப் பெண்கள்" என்று மனப்பூர்வமாகச் சிலாகித்துச் சொன்ஞன் ரங்கன். அவனை ஒரு பைத்தியக்காரன் என்று வெங்கு கேலி செய்தான். கிருஷ்ணன் இதை ஆமோதிப்பதுபோலச் சிரித்துவிட்டு, என்னைப்பார்த்து "மாமா! கிளம்புவோமா, இன்னும் கொஞ்சநேரம் இருக்கவேண்டுமா?" என்று கேட்டான்.

நிலாவும் உச்சிக்கு வந்துவிட்டது. உட்கார்ந்திருக்கும் புல்லும் குளிர்ந்து போய்விட்டது. காற்றிலும் ஈரம். "புறப்படலாம்" என்றேன். எல்லோரும் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு என்னென்னவோ பேசிக்கொண்டு வெங்கு வேலை செய்யும் வீட்டுக்குச் சென்ருேம். அங்கே வாசல் திண்ணையில்தான் எங்கள் படுக்கை. படுக்கும்போது இரவு மணி பன்னிரண்டாகிவிட்டது. மேற்கொண்டு எதுவும் பேசாமல் படுத்து உறங்கிவிட்டோம்.

தினந்தோறும் ஏறக்குறைய இதே மாதிரிதான் எங்கள் இரவு கழியும். நானும் கிருஷ்ணனும் மாம்பலத்தில் வெவ்வேறு வீடுகளில் சமையல் வேலை செய்கிருேம். வெங்கு கடந்த பத்து வருஷங்களாக நுங்கம்பாக்கத்தில் ஒரே வீட்டில் சமையல் செய்து வருகிருன். அவனுடைய முயற்சியினுல்தான்

திருநெல்வேலியிலிருந்து வந்த ரங்கசாமிக்கு நுங்கம்பாக்கத்தில் வேலை கிடைத்தது.

ரங்கசாமி இருபத்தைந்து வயதுப் பையன். என் மூத்த மகனைவிட இரண்டு வயது இளையவன். ரங்கன் ஒன்பதாம் வகுப்பில் படிக்கும்போதே, சம்பளம் கட்டப் பணமில்லாமல், படிப்பை நிறுத்திவிட்டான். யாதொரு வேலையும் இல்லாமல் சுமார் ஏழு வருஷ காலம் ஊர் சுற்றிக்கொண்டே அலைந்திருக்கிறன். நடுநடுவே கல்யாணம் போன்ற வைபவங்களுக்கு அவனுடைய தகப்பனர் சமையல் வேலைக்குப் போகும்போது ரங்கனும் கூடவே உதவிக்குச் செல்லுவான். மற்ற நாட்களில் திண்ணை தூங்கிதான். போன வருஷம் அவனுடைய தகப்பனர் செத்துப்போய் விடவே, அவனுடைய தாயார் மூத்த மகன் வீட்டுக்குப் பிழைக்கப் போய்விட்டாள். மீதியுள்ள ஒரே மகனை ரங்கன், அண்ணு வீட்டில் போய் வேலையில்லாமல் காலம் தள்ள இயலாது என்று எண்ணினுன். அத்துடன் சென்னைக்கு வந்து தன் சுய முயற்சியினுல் பெரியதொரு பதவியை அடைய வேண்டுமென்று விரும்பினுன். இவனுடைய கையை எதிர்பார்த்துப் பிழைக்க வேண்டியவர்கள் எவரும் இல்லை. அதனுல் துணிவாகச் செலவுக்குக் கொஞ்சம் பணம் பார்த்துக்கொண்டு சென்னைக்கு வந்துவிட்டான். சென்னைக்கு வர நினைத்தபோதும், வந்து சேர்ந்தபோதும் அவனுக்கு இருந்த ஒரே ஆசை சினிமாவில் சேர்ந்து நடிக்கவேண்டும்; பிரதான நடிகனுக வேண்டும் என்பதுதான். சமையற்காரர்களில் பெரும்பாலோருக்கு இந்த ஆசை உண்டு. ஆனுல் எங்களைவிட எத்தனையோ மடங்கு கீழான நிலையில் இருப்பவர்கள் சினிமாவில் சேர்ந்து பெரிய நடிகர்களாகத் தலையெடுத்து விட்டார்கள். ஆனுல் எங்களால் இன்று வரையிலும் முடியவே இல்லை. ரங்கனும் கைப்பணத்தை யார் யார் பேச்சை எல்லாமோ கேட்டு வீணுகச் செலவழித்து விட்டான். ஒரு நாள் எழும்பூர் சாப்பாட்டுக் கடையில் இவன் சாப்பிடும்போது பரிமாற வந்த ஒருவர் இவனை அடையாளம் கண்டுகொண்டார். அவர் ரங்கனின் ஊர்க்காரர். க்ஷேமலாப விசாரிப்புக்குப் பிறகு, அவர் ரங்கனை நுங்கம்பாக்கத்திலுள்ள வெங்குவிடம் அனுப்பி

வைத்தார். பட்டினி கிடந்துகொண்டு ஆகாயக் கோட்டை கட்டுவதைவிட வயிறு நிறையச் சாப்பிட்ட பிறகு கட்டுவது நல்லது என்று உபதேசம் செய்து ரங்கனுக்குச் சமையல் வேலை பார்த்துக்கொடுத்தான் வெங்கு. ஒரு வாரத்துக்குள்ளேயே ரங்கசாமி வேலையில் அமர்ந்துவிட்டான்.

பையன் சமையல் வேலை பார்ப்பவன்தான் என்றாலும் பார்ப்பதற்கு லக்ஷணமாக இருப்பான். மிக மிகப் புத்திசாலி. கடுஞ்சொல்லைத் தாங்கவே மாட்டான். ரோஷக்காரன். அவன் பேச்சிலும் பழக்க வழக்கங்களிலும் எனக்கு ஒரு சிறு குறை கூடத் தட்டுப்படவில்லை.

## 2

மறுநாள் இரவு ஒன்பதரை மணிக்கெல்லாம் அவரவர் வேலை செய்யும் வீடுகளில் வேலைகளை முடித்துவிட்டு, வழக்கம் போல உட்கார்ந்து பேசும் நுங்கம்பாக்கம் 'சுதந்திர தின பார்க்' குக்கு எல்லோரும் வந்து சேர்ந்தோம். அன்றைய நிகழ்ச்சிகள், அன்றைய நிகழ்ச்சிகளைப் போல என்றோ நடந்த நிகழ்ச்சிகள், சொந்த ஊர் விஷயங்கள், பழைய அனுபவங்கள் முதலிய பல சம்பந்தா சம்பந்தமற்ற விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். பேச்சின் நடுவில், "ரங்கா! இன்று வேலை எப்படி இருந்தது? இந்தச் சமையல் வேலை உனக்குப் பிடித்திருக்கிறதா?" என்று விசாரித்தான். பிறகு, "போகப் போகச் சரியாய்ப் போகும். ஆரம்பத்தில் நல்ல பிள்ளையாக நடந்து கொள்ள வேண்டும். அப்படியே ஒரு வருஷத்தைக் கடத்தி விட்டால் பிறகு நம் சுதந்திர வாழ்க்கையைத் தொடங்கலாம்" என்று சொல்லி முடித்தான் வெங்கு.

"வெங்கு, இன்று சாயங்காலம் நம் ரங்கசாமியின் வீட்டுக் குட்டிகளைப் பார்த்தேன். மூத்ததைவிட இளையதுதான் நன்றாக இருக்கிறது" என்றான் கிருஷ்ணன்.

"அப்படியானால் வரதக்ஷிணை வேண்டாமென்று சொல்லுகிறாய்? இல்லையா?" என்றான் வெங்கு.

எல்லோரும் சிரித்தார்கள்.

''சின்னக்குட்டி அருமையான உருப்படி. சாட்டை மாதிரி இருக்கிறது. இப்படிப்பட்ட வீட்டில் சம்பளமில்லாமலே வேலை செய்யலாமே!'' என்று கிருஷ்ணன் சொன்னான்.

''நம் ரங்கசாமி அதிர்ஷ்டக்காரன்தான். சம்பளத்தையும் வாங்கிக்கொண்டு வேலை செய்கிற பாக்கியம் கிடைத்திருக்கிறதல்லவா? டேய் கிருஷ்ணா, நீ கொஞ்சம் வாயை மூடிக்கொண்டு இரு, நான் ரங்கனை ஒரு விஷயம் கேட்கவேண்டும். ரங்கா, அந்தக் குட்டிகளோடு நீ பேசியிருக்கிறாயா? அவர்கள் உன்னோடு பேசினார்களா?'' என்று அக்கறையோடு விசாரித்தான் வெங்கு.

''ஒன்றும் பேசவில்லை'' என்றான் ரங்கன்.

''பைத்தியக்காரப் பயல்'' என்று வெங்கு சொன்னான்.

''நேற்றுப் பேசினாயோ?'' என்று அவனே கேட்டான்.

''இல்லை.''

''ஒன்றுமே பேசவில்லையா? ஆச்சரியந்தான். வாலிபப் பையன் எப்படி அடக்க ஒடுக்கமாக இருக்கிறான் பார்த்தீர்களா மாமா?'' என்று சொல்லிவிட்டு என்னைக் கிள்ளினான் வெங்கு. கிள்ளியது வலித்தது. ''சும்மா இருடா போக்கிரி'' என்று உண்மைக் கோபத்தைச் செல்லக் கோபமாகக் காட்டிக்கொண்டேன். இந்தச் சமயத்தில் ரங்கசாமி வாயைத் திறந்தான்.

''இன்று சின்னப் பெண்ணுக்குக் காப்பி கொண்டுபோய்க் கொடுக்கப் போனேன்...''

''உம்; அப்புறம்?''

''ரங்கன் ஏதோ சொல்ல வருகிறான் டோய்!''

வெங்குவும் கிருஷ்ணனும் கும்மாளி போட்டார்கள்.

''வேறொன்றுமில்லை. சின்னப் பெண் காப்பியைக் குடித்துப் பார்த்துவிட்டு, 'சர்க்கரை அதிகமாக இருக்கிறது. நேற்றும் இப்படித்தான் இருந்தது. கொஞ்சம் குறைவாகப் போட வேண்டும்' என்று சொன்னாள். இந்த ஒரு விஷயத்தைச் சொல்லுவதற்காக அவள் என்னோடு பேசியது வாஸ்தவம்.''

''சின்னப் பெண்ணே பேசிவிட்டாளா ரங்கா! நீ ஆளும் வாட்டசாட்டமாய் இருக்கிறாய்! உம், இனி உன் சமர்த்து!'' என்றான் கிருஷ்ணன்.

இந்தப் பையன்களுக்கு இதைவிட்டால் வேறு பேச்சுக் கிடையாது. தினந் தினமும் இந்த மாதிரியே பேசிப்பேசி என்னைத் திணற அடித்துவிட்டார்கள். வழக்கம் போல, 'எப்படியும் குட்டிச் சுவராகப் போங்கள்' என்று மனதுக்குள் சொல்லிக்கொண்டு புல்லின்மேல் படுத்துவிட்டேன்.

'ஆள் வாட்டசாட்டமாய் இருக்கிருய்!' என்று கிருஷ்ணன் சொன்னதை ஆமோதித்த தோரணையில் ஒரு தினுசாகச் சிரித்தான் ரங்கன். தன் அழகைப்பற்றி வேற்ருன் சிலாகித்தால் எவன்தான் சந்தோஷப்பட மாட்டான்? அதிலும் ரங்கன் உண்மையிலேயே லக்ஷணமான பையன்...

"ரங்கசாமி! இந்தப் பயல்களைப் பார்த்துக் கெட்டுப் போகாதே! நீ இளம்பிள்ளை. நன்ருக வேலை பார்த்து நாலு காசு மிச்சம் பிடித்துக் கல்யாணம் காட்சி என்று செய்ய வேண்டும். இப்பொழுதே பொறுப்பாக நடந்துகொள்ள வேண்டும். நல்ல பெயர் வாங்கவேண்டும்" என்று நான் சொன்னேன்.

அதற்கப்புறம் சுமார் இரண்டு மணி நேரம் பார்க்கிலே இருந்துவிட்டு, தூங்குவதற்கு வந்தோம்.

## 3

மறுமாதம் முதல் தேதி வந்தது. எல்லோரும் அவரவர் வீடுகளில் சம்பளம் வாங்கினோம். ஊருக்குப் பணம் அனுப்ப வேண்டியவர்கள் அனுப்பினோம். ரங்கன் யாருக்கும் அனுப்பவில்லை. அவன் வாழ்க்கையிலேயே முதல் முதலாகச் சம்பாதித்த பெரிய தொகை அவன் வாங்கிய சம்பளம் ரூபாய் இருபத்தைந்துதான். அவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. சென்னை நகரத்தில் சுமார் இரண்டு மாத காலம் நாடோடியைப் போல அலைந்து திரிந்து பசியும் பட்டினியுமாய்ப் பொழுது போக்கியவனுதலால், கையில் இருபத்தைந்து ரூபாய் கிடைத்ததைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்துகொண்டான். அன்று எல்லோரும் மூன்ருவது ஆட்டம் சினிமாவுக்கும் போனேம்.

நான் சொன்னேன்: ''ரங்கா! வெங்கு கொஞ்சம் குறும்புக் காரப்பயலானாலும் அவனால்தான் உனக்கு வேலை கிடைத்தது. அவன் பிரயாசை இல்லாவிட்டால் உனக்கு இவ்வளவு சீக்கிரத்தில் வேலை கிடைத்திருக்குமா என்பது சந்தேகமே. கிடைத்த வேலையை நன்றாகப் பார். பணத்தை மிச்சம் பிடித்து வை. வீண் செலவு செய்துவிட்டால் கஷ்ட காலத்தில் சிரமப்படும். எப்போதும் வெங்கு மாதிரி ஆள் உனக்கு அகப்பட்டுக்கொண்டிருக்க மாட்டான்.''

நான் சொன்ன புத்திமதியை எல்லாம் பணிவோடு கேட்டு மனதில் வாங்கிக்கொண்டான் ரங்கன். ''அப்புறம், வெங்கு அண்ணாவின் உபகாரத்தினாலே வயிறாரச் சாப்பிடுகிறேன்; சம்பளமும் வாங்குகிறேன். இதை மறக்கவே ாட்டேன்'' என்று என்னிடம் தனியாக ஒதுங்கி வந்து பரவசத்துடன் சொன்னான்.

எல்லோரும் சினிமாப் பார்த்தோம்.

அன்று முதல் எங்களிடம்கூட ரங்கன் மரியாதையாகவும் பொறுப்பாகவும் நடந்துகொள்ள ஆரம்பித்தான். நாளாரம்பத்தில் அவனுடைய குண விசேஷங்கள் ஒவ்வொன்றாக வெளிப்பட ஆரம்பித்தன. சொன்ன சொல் தவறாத குணம், உண்மையான பேச்சு, பேச்சில் கண்ணியம், பெண்களைப்பற்றிய பிரஸ்தாபத்தில் மற்றவர்களைப்போல கீழ்த்தரமாகப் பிதற்றாதது, எல்லாவற்றையும்விட சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளும் ஆண்மை நிறைந்த கம்பீரம்—இந்தச் சீரிய அம்சங்களை வெகு சீக்கிரத்திலேயே நான் கண்டுகொண்டேன்.

## 4

அடுத்த மாதம் பிறந்தது. வழக்கம் போல சம்பளம் வாங்கினோம். முந்திய மாதமும் இந்த மாதமும் நாளுக்கு நாள் அதிகக் குதூகலத்துடனும் ஆனந்தத்துடனும் இருந்தான் ரங்கன். முதல் மாதச் சம்பளத்தில் கால்வாசி கையிலிருக்கும் போதே இரண்டாவது மாதச் சம்பளம் இருபத்தைந்து வந்து

விட்டது. தனக்கு இந்திர பதவி கிடைத்தது போலக் கூத்தாடினுன் ரங்கன். இந்தவிதமாக அந்த மாதம் கழிந்தது.

மூன்ருவது மாதச் சம்பளம் வாங்கி நாலைந்து தினங்கள் தான் கழிந்திருக்கும். ரங்கனின் நடவடிக்கைகளில் ஒரு மாறுதலைக் கண்டேன். அவனுடைய சந்தோஷமெல்லாம் பறந்து போய்விட்டது. முகத்தை நடுநடுவே கடுகடுப்பாக வைத்துக்கொண்டான். அதிகமாகப் பேசவில்லை. ஏகதேசமாகப் பேசினுலும், வெங்குவின் பாணியில் கொஞ்சம் கீழ்த் தரமாகப் பேச ஆரம்பித்தான். தான் வேலை செய்யும் வீட்டுப் பெண்களைப்பற்றியே ஒரு விஷயம் சொன்னுன்.

"பணக்கார வீட்டுப் பெண்களாம்! சுத்தக் கூத்தாடிக் கழுதைகள்! எல்லாம் வெளிப் பகட்டுத்தான்" என்று ஒருநாள் ரங்கன் ஆரம்பித்தான். உடனே வெங்குவும் கிருஷ்ணனும் உற்சாகத்துடன் துள்ளிக் குதித்தார்கள். ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு விஷயம் என்னவென்று விசாரிக்க ஆரம்பித்தார்கள். ரங்கன் சுருக்கமாகவே பதில் சொன்னுன்.

"அடக்க ஒடுக்கம், மானம் மரியாதை என்பதே கிடையாது" என்று அவன் சொன்னதும், "என்ன, ஏதாவது நடந்ததா?" என்று பரம அக்கறையோடு கேட்டான் கிருஷ்ணன்.

"ஆண்களைப் பார்த்தால் ஒரு நாணம் வெட்கம் இருக்க வேண்டாம்? யார் வந்தாலும் போனுலும் கொஞ்சங்கூடக் கூசாமல் பாட்டுப் பாடுகிருர்கள். உதட்டுக்குச் சாயம் தடவுகிருர்கள். படுத்திருந்தாலும் ஆண்களைக் கண்டு எழுந்திருப்பதில்லை. இவர்கள் கன்னி கழியாத பெண்களாம்! என்னதான் பணத்திமிர் இருந்தாலும் ஆணுக்குமுன் பெண் குதியாட்டம் போடலாமா, சொல்லுங்கள்?"

அதற்குமேல் ரங்கசாமி அதிகமாகப் பேசவில்லை. பேச்சும் வேறு திசையில் திரும்பிவிட்டது. ஆனுல் நான் ரங்கசாமி விவகாரத்தைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தேன். 'அந்தப் பெண்கள் நாணமற்றவர்களாக இருந்தால் அதற்காக ரங்கன் கவலைப்படுவானேன்? ரங்கன் தன் உற்சாகத்தையே இழந்து எந்நேரமும் ஒரே விசாரத்துடனும் கடுகடுப்புடனும்

இருப்பானேன்? பேச்சுக் கீழ்த்தரமாக மாறுவானேன்? இவன் இந்த மாதிரி மாறியதற்கு வேறு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்.' இவ்வாறு நான் முடிவு கட்டினேன். அந்த ரகசியத்தை அவனிடமே தனியே விசாரித்தால், அவன் உண்மையைச் சொல்லிவிடுவான் என்பதில் எனக்குப் பரிபூரண நம்பிக்கை. ஆனால், அவனைத் தனியாகச் சந்திக்க எனக்குச் சாவகாசம் கிடைக்கவில்லை. சந்திக்கும் போதெல்லாம் கிருஷ்ணனும் வெங்குவும் கூடவே இருந்தார்கள். இவர்கள் நடுநடுவே ஏட்டிக்குப் போட்டியாகப் பேச ஆரம்பிப்பார்கள், ரங்கனால் உண்மையைச் சொல்ல இயலாது என்ற நினைப்போடு, நான் தக்க சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்.

வெங்கு, கிருஷ்ணன் ஆகிய இருவரும் என்றும் போலவே இருந்தார்கள்.

ரங்கசாமிக்கு ஏதோ ஒரு கவலை.

எனக்கு அவனைப்பற்றிய கவலை.

நாட்கள் கழிந்துகொண்டிருந்தன.

## 5

ஒரு நாள் இரவு சீக்கிரத்திலேயே வேலை முடிந்துவிட்டது. நேராகப் பார்க்குக்குப் போனால் மற்றவர்களுக்காகச் சுமார் அரை மணி நேரமாவது நிச்சயம் காத்துக்கொண்டிருக்க வேண்டும். அதற்குப் பதிலாக ரங்கன் வீட்டுக்குப் போய் அவன் வேலையை முடித்துவரும் வரை வாசலுக்கு வலது புறத்தில் உள்ள தெருப் பாலத்தில் உட்கார்ந்துகொண்டிருக்கலாம், ரங்கன் வந்ததும் அவனிடம் 'விபரம் என்ன?' என்று விசாரித்துக்கொண்டே பார்க்குக்கு வந்து சேரலாம் என்ற எண்ணத்துடன் அங்கு புறப்பட்டேன். ஆனால் போகும் வழியில் வெங்கு பார்க்கை வலம் வந்துகொண்டிருந்தான். 'நான் நினைத்த காரியம் கெட்டுவிட்டது' என்று வருத்தப்பட்டேன். வெங்குவும் நானும் பார்க்கை நோக்கித் திரும்ப வேண்டியதாயிற்று. நாங்கள் நடந்து திரும்பி வரும்போது, "பார்க்கில்

உட்காராமல் இங்கே எங்கே வந்தீர்கள்?'' என்று கேட்டான் வெங்கு.

''தனியாக உட்கார்ந்துகொண்டிருக்க வேண்டுமே என்பதற்காக ரங்கன் வீட்டுக்குப் போகலாம் என்று வந்தேன்.''

''ரங்கன் இப்பொழுது அந்த வீட்டில் சமையல் வேலையில் இருந்தால்தானே?'' என்ருன் வெங்கு.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவசர அவசரமாக விபரத்தை விசாரித்தேன்.

''இன்று மத்தியானத்தில் பையன் வேலையை ராஜிஞமாச் செய்துவிட்டு வந்துவிட்டான்.''

''ஏண்டா? எதற்காக வேலையை விட்டான்?''

''அது ஒரு பெரிய கதை. வாருங்கள், பார்க்கில் உட்கார்ந்து சாவகாசமாகச் சொல்லுகிறேன். உலகத்தில் ஒரு கூத்தா நடக்கிறது?''

''அது சரி, இப்பொழுது ரங்கன் எங்கே?''

''சினிமாவுக்குப் போயிருக்கிருன்.''

''வேலையை விட்டதுமில்லாமல் சினிமாவுக்கும் வேறு போயிருக்கிருஞ? பேஷ்! பயல் இனி உருப்பட்டாற் போலத்தான்!''

''மாமா! அவசரப்படாதீர்கள். முதலில் விபரத்தைக் கேட்டுவிட்டு அப்புறம் சொல்லுங்கள்.''

''என்ன பொல்லாத விபரம்! கழுதைகள்!'' பார்க்கில் வந்து உட்கார்ந்தோம். உடனே வெங்கு விபரத்தைச் சொல்ல ஆரம்பித்தான்.

''மாமா! அந்த வீட்டில் இரண்டு இளம் பெண்கள் இருப்பதாகச் சொன்ஞேம் அல்லவா?''

''ஓஹோ! அப்படியா கதை!''

''கேளுங்கள் மாமா! அந்தப் பெண்கள் இவனை ஆரம்பத்திலிருந்தே மதிக்கவில்லையாம்.''

''இவனை என்ன மதிக்கிறது, சமையற்காரப் பயலை?''

''மதிக்கிறது என்ருல் என்ன? இவனை ஆண் பிள்ளை என்றே நினைக்கவில்லையாம். வேலைக்குப்போன புதிதில், அந்தப் பெண்கள் இவனைக் கண்டு ஏகக் கிராக்கியுடன் ஒதுங்

காமலும், சில சமயங்களில் வீட்டில் இவனோடு தனியாக இருப் பதைப் பொருட்படுத்தாமலும் இருப்பதைக் கண்டு, ''ஆஹா! சூது வாது இல்லாத பெண்கள்! சகோதரனைப் போல நம்மைக் கருதிவிட்டார்கள். சங்கோஜப்படாமல் பேசுகிறார்கள். அந்நிய னிடம் நடந்துகொள்வதுபோல நம்மிடம் நடந்துகொள்ள வில்லை' என்று சந்தோஷப்பட்டான். எந்தக் காரணத்தினால் அவன் அன்று சந்தோஷப்பட்டானோ, அதே காரணத்தினால் தான் இன்று அவன் வேலையை உதறியிருக்கிறான்...''

நடுவில் நான் ஏதோ சொல்ல வாயெடுத்தேன். உடனே வெங்கு, ''குறுக்கே ஒன்றும் பேசாமல் கடைசிவரை கேளுங் கள்'' என்று சொல்லிவிட்டுத் தொடர்ந்து சொல்லலானான்.

''அந்தப் பெண்கள் சுபாவத்தில் அதிக சங்கோஜம் உடைய பெண்கள். வெளியிலிருந்து ஆண் பிள்ளைகள் யாரா வது வந்தால் எதிரே வரமாட்டார்கள். எதிரே வந்து பேச வேண்டிய அவசியம் ஏற்படுகிற சந்தர்ப்பங்களில் கால் கைகள் நடுங்கத் தட்டுத் தடுமாறி இரண்டொரு வார்த்தை களைப் பேசிவிட்டு வீட்டுக்குள் ஓடிவிடுவார்கள். நம்முடைய ரங்கன், வீட்டு வேலைக்காரன் இந்த இரண்டு பேரைத் தவிர, எந்த அந்நிய ஆடவனைப் பார்த்தாலும் நாணத்துடனும் பயத் துடனும்தான் நடந்துகொள்வார்கள். இந்த மாதிரியெல்லாம் இருப்பதைக் கண்டு ரங்கன் சந்தோஷப்படும்போது, ஒருநாள் சுமார் ஐம்பது வயது நிரம்பிய – சுருக்கமாகச் சொன்னால் உங் கள் வயதுள்ள – ஒருவர் அந்த வீட்டுக்கு வந்தார். வயது சென்றவர், ஏறக்குறையக் கிழவராகி விட்டவர் என்பதெல் லாம் தெரிந்திருந்தும், அவரிடம் பேசக்கூட அந்தப் பெண்கள் வெட்கப்பட்டார்கள். இதே போலவே பத்துப் பன்னிரண்டு வயதுப் பையன்கள் வந்தாலும் அவர்கள் வெட்கப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் அதே சமயத்தில் வாலிப வய துள்ள, கல்யாணமாகாத, பார்வைக்கும் களையான ரங்கனைக் கண்டு அவர்கள் எள்ளளவும் சங்கோஜப்படவில்லை...

''இப்படியிருக்கும்போது ஒருநாள் ஒரு வெள்ளிடம்ளரைத் தேடிக்கொண்டு மாடிக்குப் போயிருக்கிறான் ரங்கன். காலை சுமார் ஒன்பது மணி இருக்கும். அப்பொழுது மூத்த பெண்

ஒரு அறையில் காலேஜுக்குப் போவதற்காகத் துணிமணிகள் மாற்றிக்கொண்டிருந்தாள். இதைப் பார்த்ததும் கூச்சப்பட்டுத் திரும்பி வருவதற்காக அடியெடுத்து வைத்தான் ரங்கன். ஆனால் இவன் வந்த சந்தடியைக் கேட்டு, 'யார் அது?' என்று கேட்டாள் அந்தப் பெண்.

"கேட்டுக்கொண்டே வெளியே வந்தாள். அப்பொழுது மேலாக்குத் துணியின்றி ரவிக்கையை மட்டும் போட்டுக் கொண்டு இவனுக்கு எதிரே நடந்துவந்தாள். இவனைக் கண்டதுமாவது மேலாக்கைப் போட்டுக்கொள்ள வேண்டு மென்று முயற்சி செய்யாமல், 'ரங்கா! என்ன வேணும்?' என்று சாதாரணமாகக் கேட்டாள்.

"இவன் நடுங்கிக்கொண்டே 'டம்...ள...ர்' என்று உளறி னான்.

"'உள்ளேதான் இருக்கிறது. எடுத்துக்கொண்டு போ' என்றாள் அந்தப் பெண்.

"அப்பொழுதும் அவள் ஓடி மறைந்துகொள்ளவில்லை. அதற்குப் பதிலாகத் தன் ஆடை அலங்காரங்களிலே அவள் கவனமாக இருந்தாள். சிறிதும் நாணமின்றி உதட்டைக் குவித்து உதட்டுச் சாயத்தைத் தடவிக்கொண்டே, 'அப்பா ஆபீசுக்குப் போய்விட்டாரா?' என்று கேட்டாள்.

"'இல்லை' என்று சொல்லிவிட்டு, டம்ளரை எடுத்துக் கொண்டு அதிவேகமாகக் கீழே இறங்கி வந்துவிட்டான் ரங்கன்...ஹும்; நம் கிருஷ்ணனென்றால் இப்படிப்பட்ட இடத் தில் ஐந்து ரூபாய் சம்பளத்துக்குக்கூட வருஷம் பூராவும் வேலை செய்துகொண்டே இருப்பான்! அது ஒருபக்கம் இருக் கட்டும்...

"'எவ்வளவுதான் உரிமையாகப் பழகியிருக்கட்டுமே! ஆணைக் கண்டால் பெண் கூச்சப்பட வேண்டாமா? வெட்கம் கெட்டவள்!' என்று மனதுக்குள் பழித்துக்கொண்டான் ரங்கன். ஆனால் அன்று மாலையில் அவர்கள் வீட்டுக்கு வந்த இரண் டொரு வாலிபர்களிடத்தில் அந்தப் பெண்கள் வழக்கம் போலவே சங்கோஜத்துடன் நடந்துகொண்டதை ரங்கன் பார்த்துக்கொண்டான். உடனே, 'அப்படியானால் நான்

ஆண்மகன் இல்லையா? சமையற்காரனானாலும் ஆண் ஆண் தானே?' என்றெல்லாம் நீள யோசித்தான். இந்த யோசனையே அவனுக்குக் கவலையாக மாறிவிட்டது. அப்புறம் அந்தப் பெண்கள் தன்னிடம் எப்படி நடந்துகொள்கிறார்கள் என்று ஒவ்வொரு நிமிஷமும் உன்னிப்பாகக் கவனிக்கலானான். எத்தனையோ சந்தர்ப்பங்களில் அவர்கள் இவனை அலட்சியப் படுத்தி விட்டார்கள். ரங்கனுக்கு அவமானமாகப் போய்விட்டது. கோபமும் வந்துவிட்டது. 'நான் ஆண்மகன்தான் என்பதை எப்படியும் இவர்களுக்கு நிரூபித்துக் காட்டிவிட வேண்டும்; அதனால் சிறைச்சாலைக்குப் போனாலும் பரவாயில்லை' என்று விபரீதமாகத் தீர்மானம் செய்துகொண்டு தக்க சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். ஆனால் இன்று வரையிலும் சமயம் வாய்க்கவில்லை. இனி எங்கே? இன்று பிற்பகலில் நடந்த ஒரு நாடகத்தினால் வீட்டை விட்டே கிளம்பி விட்டானே!''

''என்ன நாடகம், வெங்கு?''

''இன்று விடுமுறை தினம். பிற்பகலில் அந்தப் பெண்களின் பெற்றோர்கள் பல்லாவரத்திற்கு யாரோ உறவினரைப் பார்க்கப் போய்விட்டார்களாம். அந்தப் பெண்கள் இருவரையும், பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தியையும், ரங்கனையும் தவிர வீட்டில் வேறு யாருமே இல்லையாம். மத்தியானம் மூன்று மணிக்கு அந்தக் குட்டிகள் ஒன்றுசேர்ந்து ஒரு நாடகம் போட்டார்களாம். அதாவது நேற்றிரவு பார்த்த சினிமாவில் வரும் காதல் காட்சி ஒன்றை நடிக்க ஆரம்பித்து விட்டார்கள். அவர்கள் இருந்த அறை சாத்தப்பட்டிருந்தது. உள்ளே சிரிப்பும் கும்மாளியும் அமர்க்களப்பட்டன. சிநேகிதைகள் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள் என்று ரங்கன் நினைத்துக்கொண்டான். திடீரென்று அறையின் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து, 'ரங்கா! ரங்கா!' என்று உரக்கக் கூவியழைத்திருக்கிறாள் இரண்டாவது பெண். ரங்கன் 'என்ன?' என்று குரல் கொடுத்துக்கொண்டே, அந்த அறையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும்போது, சின்னப் பெண் வந்து, 'ஒரு டம்ளரில் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவா' என்று சொன்னாள்.

அப்பொழுது ரங்கன் கண்ட காட்சி அவனைத் திக்குமுக்காடச் செய்துவிட்டது. ஏன் தெரியுமா? அந்தச் சின்னப் பெண், ஆண்வேஷம் போட்டுக்கொண்டு வந்து நின்றாள். முகத்தில் சாயம் பூசிக்கொண்டு, மீசை போட்டு, தகப்பனாரின் சரிகைத் தலைப்பாகையை எடுத்து வைத்துக்கொண்டு, தகப்பனாரின் எட்டுமுழ வேஷ்டி, கோட் முதலியவற்றை அணிந்து கைத்தடி சகிதமாகக் காட்சியளித்தாள் ஆண்மகனைக் கண்டு நாணும் முறையில் ரங்கனைப் பார்த்து அவள் சங்கோஜப் படவோ அல்லது தான் வேஷம் கட்டியதைச் சமாளித்துக் கொள்ளும் முறையில் ஒரு புன்னகைகூடச் செய்யவோ இல்லை. மொத்தத்தில் ஒரு ஆண்பிள்ளை எதிரே நிற்கிறான் என்ற எண்ணமே அவளுக்கு இல்லை. ரங்கனுக்கு அவமானமாக இருந்தது. ஒரே குழப்பத்துடன் போய்த் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு அந்தப் பெண் அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டாள். உள்ளே நாடகம் தொடர்ந்து நடந்தது...

" 'பருவ மங்கையே! இந்தப் பழ ரசத்தைச் சற்றுப் பருகு! உன் பவழ வாயால் பருகி, பாக்கியிருப்பதை எனக்குப் 'பளிச்' சென்று கொடு!'

" 'பாராளும் பட்டத்தரசே! படபடப்பு ஏனோ? கிணற்று நீரை வெள்ளமா கொண்டுபோய்விடும்?...'

"இந்தவிதமாக உள்ளே சம்பாஷணைகள்! ரங்கனால் சகிக்க முடியவில்லை. சினிமாவில் சேர்ந்தோ அல்லது வேறு விதமாகவோ பெரிய பெரிய பதவியையெல்லாம் அடைந்து பிரபலம் பெறவேண்டுமென்று ஆசைப்பட்டுச் சென்னைக்கு வந்தவனுக்கு, உலகம் இப்படிப்பட்ட மதிப்பைக் கொடுத்தால் மனம் பொறுக்குமா? ஆகவே, இனி அந்த வீட்டில் ஒரு நிமிஷம் இருந்தாலும் தன் ஆண்மையெல்லாம் அழிந்து தான் பேடியாகப் போய்விடக்கூடும் எனப் பயந்து விட்டான்! வீட்டுக்காரர் எப்பொழுது வருவார் என்று எதிர்பார்த்த வண்ணம் உட்கார்ந்துகொண்டிருந்தான். அவர் வந்ததுதான் தாமதம், ஊருக்குப் போகவேண்டும் என்று ஏதோ ஒரு பொய்க்

காரணத்தைச் சொல்லி, சம்பளப் பாக்கியை வாங்கிக்கொண்டு ஓடி வந்துவிட்டான்.''

''பழையபடியும் வேலை கிடைக்காமல் அன்றாடச் சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட வேண்டுமே!'' என்று நான் சொன்னேன்.

''மற்றவர்கள் கண்ணுக்குப் பேடியைப்போலத் தோன்றுவதைவிடப் பட்டினி கிடப்பது மேல் என்கிறான்!''

வெங்கு சொன்னதைக் கேட்டு எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. வெங்குவும் என்கூடச் சேர்ந்து சிரித்தான். சிரித்துவிட்டு, ''சமையற்காரன் ஆணிலேயும் சேர்த்தி யில்லை, பெண்ணிலேயும் சேர்த்தியில்லை போலிருக்கிறது!'' என்றான்.

''கோட்டும் சட்டையும் போட்டுக்கொண்டு உத்தியோகம் பார்ப்பவர்கள், குடுகுடு கிழமாக இருந்தாலும் இந்தப் பெண்களுக்கு ஆண் சிங்கங்களாகக் காட்சியளிக்கிறார்கள். அவர்களைப் பார்த்த மாத்திரத்தில் இவர்களுக்குத் தாங்க முடியாத சங்கோஜம்! பேச முடியாத தளுதளுப்பு! நிற்கமுடியாத நடுநடுக்கம்! ஆனால் சமையற்காரன் எவ்வளவு வாலிபனாயிருந்தாலும்...''

அப்புறம் வெகுநேரம் ரங்கனைப்பற்றியும் மற்ற விஷயங்களைப்பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். இரவு பத்து மணிக்கெல்லாம் ரங்கனும் கிருஷ்ணனும் சினிமாப் பார்த்துவிட்டு வந்தார்கள். ரங்கனைப் பார்த்ததும், ''வாடா என் ஆண்பிள்ளைச் சிங்கம்!'' என்று பரிகாசமாகச் சொல்லிவிட்டுச் சிரித்தான் வெங்கு.

ரங்கனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''நான் ஆண்பிள்ளைதான் என்பதை அவள் புத்தியில் படும்படி காட்டியிருப்பேன். ஆனால், என்னைச் சிபாரிசு செய்து வேலையில் சேர்த்த உங்களுக்குக் கெட்ட பெயர் வரக்கூடாதே என்று பேசாமல் விட்டுவிட்டேன், தெரியுமா?'' என்று வீறாப்போடு சொன்னான் ரங்கன்.

# 17-ம் நம்பர் வீட்டு நாய்

ஒரு தெருவில் இரண்டு வீடுகள் இருந்தன. ஒரு வீட்டுக்கும் மற்றொரு வீட்டுக்கும் நடுவில் சுமார் ஒரு பர்லாங் தூரமாவது இருக்கும். இந்த இரண்டு வீடுகளுக்கும் நடுவே எத்தனையோ வீடுகள்.

ஒரு வீட்டின் நம்பர் 17; மற்றொரு வீட்டின் நம்பர் 26. வீட்டுக்கு ஒவ்வொரு ஆண் நாய் உண்டு.

17-ம் நம்பர் வீட்டு நாயை வீட்டுக்காரன், 'எடுத்து வளர்க்க'வில்லை. தெருவோடு அலைந்துகொண்டிருந்தபோது அது தானாக மோப்பம் பிடித்து, எலும்புத் துண்டுக்கு ஆசைப் பட்டு 17-ம் நம்பர் வீட்டுப் புழக்கடை வழியாக உள்ளே நுழைந்தது. சமையல்காரன் நாயைப் பார்த்ததும், 'சீ, போ' என்றான். 'போ' என்றதும் நாய் வெளியே போய்விடவில்லை; அதற்குப் பதிலாக வீட்டுக்குள்ளே பலாத்காரமாக நுழையவுமில்லை. அப்படித் தைரியமாக நுழைவதற்கு நாய் என்ன சிங்கமா? புழக்கடை முற்றத்திலேயே அசட்டு நம்பிக்கையோடு உலாவிக்கொண்டிருந்தது.

கொஞ்சநேரம் கழிந்தது. சமையல்காரன் சந்தர்ப்பவசமாக வெளியே வந்து நாயைப் பார்த்துக்கொண்டான். உடனே பக்கத்தில் கிடந்த செங்கல் துண்டை எடுத்து நாயைப் பார்த்து எறிந்தான். அசந்தர்ப்பமாகக் குறி தைத்துவிட்டது. நாய்க்கும் ஒரு கண் போய்விட்டது. நாலைந்து தடவை அது ஊளையிட்டுவிட்டு, பழையபடியும் அங்கேயே வந்து நின்றது.

வீட்டில் எல்லோரும் சாப்பிட்டார்கள். பிறகு, எச்சில் இலைகளை வெளியே கொண்டுவந்து எறிந்தான் சமையல்காரன்.

"இது அல்லவா மகாராஜன் வீடு!" என்று மெச்சிக் கொண்டு நாய் எச்சில் இலைகளைக் கிளைத்தது.

அன்று முதல் 17-ம் நம்பர் வீட்டிலேயே நாய் நிலைத்து விட்டது. புழக்கடையிலே, பசுமாடு கட்டும் ஒரு தாழ்வாரத்தில் தினமும் படுத்துக்கொள்ளும். எப்போதாவது வெளியே

வந்து விழும் எச்சில் இலைகளை நக்கி, வயிற்றுப் பசியைத் தணிக்க முயற்சி செய்யும். நாளாக ஆக, வீட்டோடு நாய் பழகிவிட்டது. தைரியமாகவே முன்வாசல் திண்ணையில் போய்ப் படுத்துக்கொள்ளவும் தொடங்கியது. அதற்குச் சாப்பாடு போடுகிறவர்களும் கிடையாது; விரட்டுகிறவர்களும் கிடையாது. வீட்டில் எந்த இடத்தில் வேண்டுமானாலும் படுத்துக்கொள்ளும். நினைத்த நேரத்தில் குரைக்கும்; ஊளையிடும்; வீட்டுக்காரர்கள் எல்லோரும் தனக்கு மிகவும் அத்யந்தமாகிவிட்டார்கள் என்று நினைத்து, அவர்கள் 'சீ' என்று சீறி விழும் வரையில் அவர்களைப் போய் உரசிக்கொண்டிருக்கும்.

ஒருநாள் அது வீதி சுற்றி வரும்போது, 26-ம் நம்பர் வீட்டு நாயைப் பார்த்துக்கொண்டது. அந்த நாய் தன் வீட்டை அடுத்துக் கொஞ்சம் தள்ளி வெளியே நின்றுகொண்டிருந்தது.

ஒரே தெருவில் இருந்து பழகிவிட்ட நாய்களானதால் பரஸ்பரம் ஒன்றை ஒன்று மிரட்டாமல், பக்கம் பக்கமாக நின்று பேசத் தொடங்கின.

26-ம் நம்பர் வீட்டு நாய் கேட்டது:

"என்ன? ரொம்பவும் மெலிவாயிருக்கிறயே!"

"என் உடம்பே 'நார்ப்பறிஞ்ச' உடம்புதானே! எப்போ நான் கொழு கொழுன்னு இருந்திருக்கேன்?"

"உன் வீட்டுக்காரன் எச்சில் கையால் காக்கா விரட்டாத லோபியோ?" என்று 26-ம் நம்பர் வீட்டு நாய் கேட்டது.

"அப்படியெல்லாம் அவர்களைக் குறைச்சிப் பேசாதே! தருமப் பிரபுக்கள்!"

"உன் உடம்பைப் பார்த்தாத் தெரியுதே, அவன் தருமப் பிரபு என்கிறது!"

"ரொம்பவும் கேலி பண்றயே, உன் வீட்டுக்காரன் மட்டும் என்ன, பெரிய கசாப்புக் கடைக்காரனோ?"

பெரிய கொடைவள்ளலோ, அல்லது கர்ணனோ என்று கேட்பதற்கு, 'கசாப்புக் கடைக்காரனோ?' என்றுதான் நாய்கள் கேட்கும்.

"அவர் கசாப்புக் கடைக்காரரென்றால் என்ன? கத்திரிக்காய்க் கடைக்காரரென்றால் என்ன? எனக்கு நிறையச் சாப்

பாடு போடுகிறர். என்னை வீட்டைவிட்டு விரட்டுவதில்லை. கண்ணிலேயும் கல்லை விட்டெறிவதில்லை. 'அவங்க என் மேலே பிரியமாயிருக்கணும், என்னைத் தடவிக் குடுக்கணும்னு' நான் போய்க் காலை நக்கமாட்டேன், சாப்பிட்ட உடனே கூண்டுக்குள்ளே போய்ப் படுத்துக்கிடுவேன்.''

''அட பாவமே! நீ கூண்டுக்குள்ளேயா படுக்கிறே?'' என்று 17-ம் நம்பர் வீட்டு நாய் கேட்டது.

''அது கேவலமாப் போச்சோ? உன்னைப்போல, முற்றத்திலே படுத்தாத்தான் ஒசத்தியாக்கும்!''

''பைத்தியக்காரா! நீ பிறவியிலேயே அடிமையாகப் பிறந்தவண்டா! அவர்கள் சாப்பாடு போட்டு என்ன செய்ய? வளர்த்து என்ன செய்ய? உன் சுதந்திரத்தைப் பிடுங்கிக் கொண்டார்களே!''

17-ம் நம்பர் வீட்டு நாய் அட்டகாசமாகப் பரிகாசம் செய்தது.

''எங்கே என் சுதந்திரத்தைப் பிடுங்கிக்கொண்டார்களாம்? பாத்தது மாதிரிப் பேசுறயே!'' என்று 26-ம் நம்பர் வீட்டு நாய், குல புத்தியோடு (கோபத்தோடு) கேட்டது.

''பாக்காமலா சொல்றேன்? உன் இஷ்டப்படி நீ உன் வீட்டுக்குள்ளே நின்று குலைக்க முடியுமா? ஊளையிட முடியுமா?''

''இஷ்டப்படி குலைக்கவும் ஊளையிடவும் எனக்கென்ன வெறியா பிடிச்சிருக்கு? வீட்டுக்குள்ளே எவனும் அந்நியன் வந்தாக் குலைப்பேன்; எனக்கு ஆபத்து வந்தாக் குலைப்பேன்; போய்க் கடிக்கவும் செய்வேன். வீணுக் குலைச்சிக்கிட்டிருந்தா, சவுக்கடி தான் கிடைக்கும்.''

''அதுதானே கேட்டேன்! நான் என்னுடைய வீட்டிலே நினைச்ச நேரத்திலே குலைப்பேன்; ஊளையிடுவேன். நினைச்ச இடத்திலே ஒன்றுக்கு இரண்டுக்குப் போவேன். பசியெடுத்தாக் குலைப்பேன். அடிச்சாலும் பயப்படாமல் குலைப்பேன். என்னையெல்லாம் அடிச்சு அடக்க முடியாது. ஏனென்றல் பிறவியிலேயே நான் சுதந்திர புத்தியோடு பிறந்த ஜென்மம். இது தெரிஞ்சுதான் எங்க வீட்டுக்காரங்க, நான் குலைச்சாலும் இப்போ ஒண்ணும் செய்றது கிடையாது.''

''சாப்பாடு போடறதும் கிடையாது!'' என்று சொன்னது 26-ம் நம்பர் வீட்டு நாய்.

''சாப்பாடு என்னடா சாப்பாடு! சாப்பாடா பெரிய காரியம்? என்னுடைய சுதந்திரத்துக்கு நான் சாப்பாட்டையும் தியாகம் செய்வேன்; உயிரையும் தியாகம் செய்வேன். நினைச்ச இடத்திலே படுக்கவும், நினைச்ச இடத்திலே மலஜலம் கழிக்கவும், நினைச்ச நேரத்திலே ஊளையிடவும் சுதந்திரம் இல்லாமல் ஒரு பிழைப்பா?''

''எங்க வீட்டிலே அது முடியாதப்பா! அவங்க அவங்க சாப்பாட்டைச் சாப்பிட்டுப் போட்டு, அவங்கவங்க வேலையைக் கவனிக்கவே அங்கே நேரம் சரியாயிருக்கு. அப்படியிருக்கும்போது வெட்டித்தனமாக் குலைச்சிக்கிட்டு யார் இருப்பா? எனக்கு ஒரு குறையும் இல்லாதபோது நான் ஏன் குலைக்கணும்?''

''குலைக்கிற சுதந்திரம் இல்லாத ஒரு குறை போதாதா, பைத்தியக்காரா?''

26-ம் நம்பர் வீட்டு நாய்க்குக் கோபம் வந்துவிட்டது:

''மூஞ்சியைப் பாருங்க மூஞ்சியை! வயித்துக்குச் சோத்தைக் காணோம்! இவுகளுக்குக் குலைக்கிற சுதந்திரம் வேணுமாமே! அப்பா! வீணுக் குலைச்சிட்டு இராதே! காலாகாலத்திலே போய் எச்சிலை கிடைக்குமான்னு பாரு!''

அந்த நாய் கோபமாகப் பேசிக்கொண்டிருக்கும்போதே அந்த வீட்டு எஜமானனின் பிள்ளை அங்கே வந்துவிட்டான். ''என்ன டைகர்! இங்கேயா நிக்கறே! நாங்களெல்லாம் சாப்பிடப் போறோம். உனக்கும் சாப்பாடு போடப்போறாங்க, சீக்கிரம் வா'' என்று அன்பாகத் தடவிக் கொடுத்துக் கொண்டே அழைத்துச் சென்றான். போகும்போதே, ''உனக்குச் சாப்பிடற சுதந்திரம் இருக்கா, முட்டாளே?'' என்று கேட்டது அந்த நாய்.

''போடா, சாப்பாட்டு ராமா!'' என்று சொல்லிவிட்டு, 17-ம் நம்பர் வீட்டு நாய் மிகவும் பரிகாசமாக ஊளையிட்டது; பிறகு அந்த இடத்தைவிட்டுக் கிளம்பியது. தன்னுடைய சுதந்திர வாழ்க்கையை நினைக்க நினைக்க அதற்குப்

பேரானந்தமாக இருந்தது. குரைக்கும் சுதந்திரம் இருக்கிறது என்பதை மறுபடியும் ஞாபகப்படுத்திக்கொள்ளுவதற்காகத் தெருவெல்லாம் குரைத்துக்கொண்டே ஓடி வந்தது. தெருவோடு வந்த பையயன் ஒருவன் நாய் குரைப்பதைப் பார்த்துப் பயந்துவிட்டான். தன்னைக் கடிக்கத்தான் வருகிறது என்று நினைத்து, ஒரு கல்லை எடுத்து நாயின்மேல் எறிந்தான்; எறிந்த கல் நாயின்மேல் விழுவதற்கு முன்பாகவே கம்பியை நீட்டி விட்டான்.

இந்தக் கல்லால் நாய்க்குக் கண் போகவில்லை; ஒரு கால்தான் ஒடிந்து போய்விட்டது. சுற்றுமுற்றும் பையனைக் காணாததால், பலமாகக் குரைத்துக்கொண்டே 1 -ம் நம்பர் வீட்டுக்குள் நுழைந்தது நாய்.

# பாம்புக் குட்டி

*முதல் நாள்:*

ஒரு விஷப்பாம்பின் குட்டி தன் தாயிடம் சொல்லுகிறது: ''நீ சொன்னது நிஜம்தான் அம்மா! இன்று புதர்ப் பக்கத்தில் உணவுக்கு ஒன்றும் அகப்படவில்லையென்று கிணற்றுப்பக்கம் எலிவளையைத் தேடிக்கொண்டு போனேன். தரைக்குள்ளா கப் பொந்து வழியாகத்தான் போய்க்கொண்டு இருந்தேன். கிணற்றில் நாலைந்து மனிதர்கள் குளித்துக்கொண்டு இருந் தார்கள். மண்ணுக்குள் இருந்த வாக்கிலேயே ஜாக்கிரதை யாக வெளியே தலையை நீட்டினேன். என்னை ஒருவன் பார்த் துக்கொண்டான். நீ சொன்னபடியே அந்த மனிதனைப் பார்த் ததும் தலையை உள்ளே இழுத்துக்கொண்டேன். அப்போது என் பக்கத்தில் எல்லோரும் ஓடிவரும் சப்தம் கேட்டது. அந் தச் சமயத்தில் ஏதோ ஒன்றைக் கண்டு ஒரு வாலிபன் பயந்து போனான் போலிருக்கிறது. அவனைப் பார்த்த இன்னொருவன் 'தெரியாமலா சொன்னார்கள், பாம்பைக் கண்டால் படை யும் நடுங்கும் என்று? எதற்கும் பயப்படாத கோவிந்தனும் இன்று மரவேரைக் கண்டதும் பாம்பு என்று மிரண்டு பயந்து விட்டானே!' என்று சொன்னான். அம்மா, உண்மையில் மனிதன் எவ்வளவு பெரிய பலசாலி! இருந்தாலும் நம்மைக் கண்டு பயப்படுகிறானே! நம்முடைய ஒரு துளி விஷத்தால் பிரம்மாண்டமான மனித வர்க்கத்தையே அழித்துவிடலாம் போலிருக்கிறதே!''

தன் குட்டி சொல்வதைச் சரியென்று ஒப்புக்கொள்ளும் தோரணையில் தாய்ப் பாம்பு மௌனமாக இருந்துவிட்டது.

*மறுநாள்:*

''அம்மா இன்று ஒரு சின்ன எலியைப் பிடித்தேன். அது 'வீச் வீச்' என்று கத்தத் தொடங்கியது; இதையும் ஒரு மனி தன் பார்த்துக்கொண்டான்; உடனே என்மீது ஒரு கல்லை வீசி

எறிந்தான்; கல்லெறி ஒரு பக்கமாக விழுந்து சறுக்கிவிட்டுப் போனாலும், என் உடம்பில் சின்னஞ்சிறு காயம் பட்டுவிட்டது. 'அவனைக் கடித்துவிடலாம், நம்மிடம்தான் விஷம் இருக்கிறதே' என்று நினைத்தேன். ஆனால் நீ சொன்னபடி...... ஐயோ!..."

உடம்பை ஒருதரம் நெளித்து உதறிக்கொண்டது பாம்புக் குட்டி.

"...நீ சொன்னபடி மனித சம்பந்தமே ஆபத்து என்று பேசாமல் நம் புதருக்குத் திரும்பினேன். ஐயோ! இதோ பார், இந்தச் சிறு புண்மேல் எறும்பு மொய்க்க ஆரம்பித்துவிட்டது."

தாய்ப் பாம்பு, குட்டியின் புண்ணைப் பார்த்தது.

"...உம்; பார்த்துத்தான் என்ன பிரயோஜனம்? எங்கேகுப் போனாலும் இந்தப் பாவி எறும்புகள் என்னை விடமாட்டேன் என்கிறதே. ஐயோ! 'சுறுக் சுறுக்'கென்று இப்படியா கடிக்கும்! இந்த எறும்புகளைக் கடிக்கப்போய் என்னைத்தான் கடித்துக்கொண்டேன். பார், எத்தனை புண்கள்! என்ன செய்யட்டும், அம்மா? நான் செத்துப்போவேன் போலிருக்கிறதே! பயங்கரமான மனிதர்களுக்கும் அஞ்சாமல் விஷத்தினாலும் என் ஜாக்கிரதையினாலும் தப்பி அவர்களைப் பயமுறுத்தி வந்தேன்; என்னுடைய கடியில் பலரைக்கூடக் கொன்று தீர்த்திருப்பேன். இதென்ன கஷ்டம்! எறும்பு இப்படிப் பிடுங்குகிறது. இதற்கு எந்த ஜாக்கிரதைதான் என்ன செய்யும்? ஒளிவதுதான் எங்கே? எப்படிச் சீறினாலும் எறும்புகளைப் பயமுறுத்த முடியாதே! எனக்கு எத்தனை பேர் துணைக்கு வந்தாலும் என்ன செய்ய முடியும் அம்மா? தண்ணீரில் விழுந்து வெளியே வந்தாலும், வந்தவுடனே எறும்புகள் மொய்க்க ஆரம்பித்து விடுகின்றன. இப்படிப்பட்ட சக்தியற்ற ஜந்துக்களும் நம்மை சக்தியற்ற பிராணிகளாக்கிவிடும் ஒரு விசித்திரமான சந்தர்ப்பமும் உலகத்தில் இருக்கிறதே! ஐயோ!"

தன் குழந்தை சொல்வதைச் சரியென்று ஒப்புக்கொள்ளும் தோரணையில் தாய்ப் பாம்பு மௌனமாக இருந்துவிட்டது.

# வாத்தியாரம்மாள்

அது மிகவும் சின்னஞ்சிறு கிராமம். மொத்தம் முந்நூறு வீடுகள்கூட இராது. ஆனால் அந்த ஊருக்குப் பள்ளிக்கூடங்கள் இரண்டு. ஒன்று ஆண் பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடம். அப்படியானால் மற்றொன்று பெண்பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடமாகத்தான் இருக்க முடியும்.

வடிவம்மாள் என்ற ஹையர் கிரேடு வாத்தியாரம்மாள் அம்பாசமுத்திரம் சரகத்திலிருந்து மாற்றுதலாகி இந்த ஊருக்கு வந்து ஒருநாள்தான் ஆகிறது. துல்லியமாகச் சொன்னால் பதின்மூன்று மணி நேரம்தான் ஆகியிருக்கிறது என்று சொல்லவேண்டும். ஏனென்றால் முதல் நாள் இரவு எட்டு மணி சுமாருக்குத்தான் வடிவம்மாளும் அவளுடைய தாயாரும் வந்து இறங்கினார்கள்.

வடிவம்மாள் எட்டரை மணிக்கே வந்து வேலையை ஒப்புக்கொண்டாள். அந்தக் கிராமத்திலிருந்து மாற்றுதலாகி வேற்றூருக்குப் போகும் வாத்தியாரம்மாள் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுத் தன் ஜோலியைக் கவனிக்க வீட்டுக்குப் போய்விட்டாள். அந்த அம்மாள் சீக்கிரம் வீட்டைக் காலி பண்ணினால்தான் தானும் தன் தாயாரும் கொண்டுவந்த பொட்டணங்களை அவிழ்த்து வீட்டிலே வைக்கமுடியும் என்ற முன் ஜாக்கிரதையினால், எவ்வளவுக்கெவ்வளவு பேச்சைச் சுருக்கமுடியுமோ அவ்வளவுக்கவ்வளவு சுருக்கி அவளை அனுப்பிவிட்டாள் வாத்தியாரம்மாள்.

அவள் வெளியே போவதற்கு இரண்டொரு நிமிஷங்களுக்கு முன்னால், கயத்தாறு சந்தைக்குப் போய்விட்டு வந்த கைலாசம் பிள்ளை - அவர்தான் பெண்பாடசாலைக் கட்டிடத்தை மாதம் எட்டு ரூபாய் வாடகைக்கு ஜில்லா போர்டுக்கு விட்டிருப்பவர் - வந்தார். வந்து புது வாத்தியாரம்மாளின் க்ஷேம லாபங்களை விசாரித்துவிட்டு, பால் மோர் வகையறுக்களைத் தம் வீட்டிலேயே விலை கொடுத்து வாங்கிக்கொள்ள

லாம் என்ற முக்கியமான விவரத்தையும் முக்கியமில்லாத நடைமுறை விவகாரம் போலக் குறிப்பிட்டுவிட்டுச் சுமார் பதினைந்து நிமிஷத்தில் அவ்விடத்தைவிட்டு நகர்ந்துவிட்டார். 'கியூ' வரிசையில் நின்று பேட்டி காண வருகிறவர்களைப் போல அவ்வளவு நேரமும் வீட்டுச் சோலியாக இருந்த வேலம்மாள், கைலாசம் பிள்ளை போனதும் பள்ளிக்கூடத்துக்குள் அடி எடுத்து வைத்தாள்.

வேலம்மாள், கைலாசம் பிள்ளையின் தங்கை. வாத்தியாரம்மாளின் தாயாரைப்போல ஒரு விதவை. வயதும் வாத்தியாரம்மாளைப்போல முப்பதுக்குமேல் முப்பத்தைந்துக்குள்ளாகத்தான் இருக்கும். வெளியே சொல்லிக்கொள்ளுவது நாற்பதுக்குமேல் என்றுதான். இதுதான் மேல்நாட்டுப் பண்புக்கும் நம் நாட்டுப் பண்புக்கும் உள்ள வித்தியாசம். இங்கே ஐரோப்பியப் பெண்களைப்போல வயதைக் குறைக்காமல் அதற்குப் பதிலாகக் கூட்டிச் சொல்லுவதில் எல்லா விதவைப் பெண்களுக்குமே ஆசை. வயதைக் கூட்டித்தான் கௌரவத்தையும் பெரிய மனுஷத் தனத்தையும் இங்கே சம்பாதிக்க முடியும்.

வேலம்மாளின் வீடு, பெண் பாடசாலைக்கு எதிர்ப்புறமாக உள்ளது. கைலாசம் பிள்ளை சம்சாரத்துக்கும் வேலம்மாளுக்கும் எப்போதோ மறந்துபோன ஒரு காலத்தில் ஏற்பட்ட மனஸ்தாபத்தின் காரணமாக இப்போது பரஸ்பரம் இருவருக்கும் பேச்சு வார்த்தை கிடையாது. ஆகவே அந்த அம்மாளுக்குப் பொழுதுபோவது பெரிய எமவாதை மாதிரி. கஷ்ட காலத்துக்கு ஒரு நிவர்த்தி பிறந்ததுபோல எண்ணிக்கொண்டு புது வாத்தியாரம்மாள் வந்த தகவலை அறிந்து பள்ளிக்கூடத்துக்கு வந்தாள்; வந்து தரையில் கிடந்த ஒரு பலகையில் வாத்தியாரம்மாளுக்கு எதிரே உட்கார்ந்துகொண்டாள். அவ்வளவுதான், இனி வேலம்மாள் தன் பேச்சை முடித்து வீடு திரும்ப வேண்டுமென்றால் அந்த ஊரில் பூகம்பத்தைப்போல சரித்திர முக்கியத்துவம் உள்ள விபரீதம் ஒன்று நேரவேண்டும். அப்படி நேராத வரையில் வேலம்மாள் இருப்பிடத்தைவிட்டு எழுந்திருப்பாள் என்று எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனம்

குசலப் பிரச்னம் ஆனது. வாத்தியாரம்மாளுக்கு அம்பா சமுத்திரம் சீமையல்லவா தாயகம்? இதைத் தெரிந்துகொண் டதும் அம்பாசமுத்திரத்தில் தன் தாய்வழிப் பாட்டனுருக்கு இரண்டாம் தாரமாகப் பெண் தேடிக் கல்யாணம் முடித்த கதையைச் சொல்லத் தொடங்கிளுள் வேலம்மாள். இப்போது தான் அந்தக் கதை ஆரம்பித்திருக்கிறது. அதிலிருந்து இன்று வரை நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லி முடிக்காமல் வேலம் மாள் எழுந்திருப்பதாக இல்லை. ஆகவே மூன்று தலைமுறைச் செய்திகள் இனிப் பாக்கியிருக்கின்றன. இந்தச் சமயத்தில் ஆண் பாடசாலையில் இடைவேளைக்காக அடிக்கும் மணி யோசை கேட்டது. கேட்டதும் வடிவம்மாளுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"என்ன, அதற்குள்ளே மணி பத்தரை ஆயிட்டதா?" என்ருள் வாத்தியாரம்மாள்.

"பிறகு பத்தரை இராதா? எவ்வளவு நேரமாயிட்டது! கேட்டீகளா, நூறு ரூபாய்க்குக் கொறையாமே பந்தல் போட் டுத்தான் கலியாணத்தைச் சிறப்பாச் செய்யணும்னு..."

"என்ன, பிள்ளைகளைக் காணவே இல்லை? நானும், வரும் வரும்னு உட்கார்ந்துகிட்டு இருக்கேன்..."

"பிள்ளைகள் தினம் தவரும வர இதென்ன டவுணு? இன்ஸ்பெட்டர் வரும்போது கூட நாலு பிள்ளைகளைக் கொண்டு வந்து உக்காத்தி வைக்கப் பெரும்பாடாய்ப் போயிருமே."

வாத்தியாரம்மாளுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஒரே பய மாகப் போய்விட்டது. ஊரிலுள்ள ஜனங்கள் காட்டு ஜனங் களைப்போல் இருக்கிற மாதிரியே பள்ளிக்கூடமும் இருப்பதாக நினைத்து மிகவும் பயந்துபோனுள். வேலம்மாளின் பேச்சுக்கு 'உம்' போட்டுக்கொண்டே, மாணவிகளின் ஆஜர்ப்பட்டியை எடுத்துப் பார்த்தாள்.

முதல் நாளும் அதற்கு முந்திய எல்லா நாட்களிலும், ஞாயிற்றுக்கிழமை சனிக்கிழமை அரை நாள் தவிர, எல்லாப் பிள்ளைகளும் ஆஜர்என்றே அடையாளம் செய்யப்பட்டிருந்தது.

வடிவம்மாளுக்குப் பயம் மூச்சை அடைத்தது; பேசிக் கொண்டே இருக்கும் வேலம்மாளின் குரல் கிணற்றுக்குள்

இருந்து போடும் ஓலம்போலக் கேட்டது. வடிவம்மாளுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. ஒரு அரை மணி நேரம் அப்படியே கல்லாகச் சமைந்து உட்கார்ந்து விட்டாள்.

கடைசியில் வேலம்மாள் மூச்சு வாங்கும் நேரம் பார்த்து, 'இதுதான் சமயம்' என்று "நான் வீட்டுக்குப் போகணும்" என்று சொல்லிவிட்டு எழுந்தாள். அவள் எழுந்து நின்று, பிறகு நகர்ந்து, கதவை இழுத்துச் சாத்தி, வீட்டுக்குப் புறப் பட்டு, தெருக்கோடி திரும்பும் மட்டும் வேலம்மாள் நிறுத்தா மல் பேசிக்கொண்டிருந்தாள் என்றாலும் அதைக் கண்டு வாத்தியாரம்மாள் யாதொரு கவலையும் படவில்லை. ஏனென்றால் வேலம்மாள் தன்னைப் பின் தொடர்ந்து வரவில்லை என்பது பெரிய ஆறுதலாக இருந்தது.

வீட்டுக்கு வந்து பழைய வாத்தியாரம்மாளிடம் விவரங் களை விசாரித்தாள் வடிவம்மாள். அநேக புதுப் புதுத் தகவல் கள் எல்லாம் கிடைத்தன.

அந்தப் பள்ளிக்கூடம் நிலைத்திருப்பதற்குக் கைலாசம் பிள்ளைதான் காரணகர்த்தா. மாதாமாதம் அந்த ஒழுக்கல் கட்டிடத்துக்கு எட்டு ரூபாய் வாடகை கிடைக்கும் லாபத்தை உத்தேசித்து, யார் யாரை எல்லாமோ சரிக்கட்டிப் பள்ளிக் கூடத்தைப் பத்து வருஷ காலமாய் ஊரிலே நிலைத்திருக்கச் செய்துகொண்டிருக்கிறார். அந்தப் பள்ளிக்கூடத்தில் படிப்ப வர்கள் என்று பதிவு செய்யப்பட்ட மொத்த மாணவிகளின் தொகை நாற்பத்திமூன்று. இவர்களில் மூன்று பேர் அந்த ஊரை விட்டுப்போய் எத்தனை வருஷங்களாகின்றன என்று யாருக்கும் தெரியாது. இரண்டு பிள்ளைகள் துரதிர்ஷ்டவச மாகச் செத்துப்போய் விட்டார்கள். செத்து ஒரு வருஷமாகி யும்கூட அவர்கள் பள்ளிக்கூடக் கணக்கில் புகழுடம்புடன் உலாவிக்கொண்டிருக்கிறார்கள். மீதி மாணவிகளில் ஆறு பேர் ஆதிதிராவிடப் பிள்ளைகள். அவர்கள் ஹரிஜனப் பிள்ளை களாக மாறியும், பள்ளிக்கூடத்தில் மகாத்மா காந்தி படம் வைக்கப்பட்டிருந்தும்கூட, பள்ளிக்கூடத்துக்குள் அவர்கள் நுழையக்கூடாது என்பது ஊர்க்கட்டு. நுழைந்தால் பள்ளிக் கூடத்தை இடித்து விடுவோம் என்று அந்த ஊரில் சிலர்

சபதம் போட்டிருக்கிருர்கள். அந்த ஹரிஜனப் பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்குள் நுழையலாம் என்ருலும், அவர்கள் படிக்க வருவார்களா என்பது வேறு விஷயம். மீதிப் பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வராததற்குப் பிள்ளைக்கு ஒரு காரணமோ ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்களோ இருந்தன. காரண மில்லாவிட்டால்தான் வந்திருப்பார்களே!

கடைசியில் வாத்தியாரம்மாள் பகீரதப் பிரயத்தனம் செய் தால் சுமார் பத்துப் பிள்ளைகளாவது பள்ளிக்கூடத்தை எட்டிப் பார்ப்பார்கள் என்ற நம்பிக்கையை ஊட்டிருள் பழைய வாத்தியாரம்மாள்.

இந்தப் படு பயங்கரமான சூழ்நிலையில் வாத்தியாரம்மா ளின் நெஞ்சு 'திக் திக்'கென்று அடித்துக்கொண்டது. ஆகவே அம்பாசமுத்திரத்தில் தாலூகா ஆபீஸ் குமாஸ்தாவாக இருக் கும் தன் தமையனுக்குக் கடிதம் எழுதும்போது, அந்த ஊரை ஆப்பிரிக்க வனுந்தரத்தைப்போல வர்ணித்து எழுதியதோடு, தனக்கு வெகு சீக்கிரத்தில் வேறு எங்காவது 'மாற்றுதல் ஆர் டர்' வாங்கித்தர முயற்சி எடுத்துக்கொள்ளும்படியும் எழுதி விட்டாள். சுருங்கச் சொன்னுல் அந்த ஊரில் நரமாமிச பக்ஷணிகள் இருப்பதாகத்தான் எழுதவில்லை.

இரவில் தாயாரிடமும, "இந்த ஊர் ஜனங்களைப் பார்த் தாலே எனக்குப் பயமா இருக்கு" என்று ரகசியம்போலச் சொன்னுள் வாத்தியாரம்மாள்.

விடிந்தது. குறிப்பிட்ட நேரத்தில் வாத்தியாரம்மாள் பள்ளிக்கூடத்துக்குப் போய்க் கைலாசம் பிள்ளையின் ஒத் தாசையின்பேரில் ஒரு ஐந்தாறு பிள்ளைகளைப் பள்ளிக்கூடத் தில் கொண்டுவந்து உட்கார வைத்துவிட்டாள். ஐந்தாறு பேரிலும் பாடப் புத்தகம் வைத்திருந்தவர்கள் மூன்று பிள்ளை கள்தான். அதிலே ஒரு பிள்ளை, வாத்தியாரம்மாள் மலைபோல எதிரே உட்கார்ந்திருந்தும் எப்படித்தான் எழுந்து வெளியே ஓடி மறைந்தாளோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

பள்ளிக்கூடம் விட்டு வாத்தியாரம்மாள் வீட்டுக்கு வந் தாள். 'இதுவரைக்கும் வேலம்மாள் எங்கே போயிருந்தாள்?' என்ற சந்தேகம் ஏற்படலாம். வேலம்மாளுக்கு, வாத்தியா

ரம்மாள் என்ருல் என்ன? அவளுடைய தாயார் என்ருல் என்ன? தவிரவும் வாத்தியாரம்மாளிடம் பேசுவதென்ருல் முதல் நாள் சொன்ன செய்திகள் நீங்கலாக ஏனைய சமாச்சாரங்களைத் தான் சொல்லவேண்டும்; கிழவியிடமோ ஆரம்பத்திலிருந்தே சொல்லலாம். இந்த லாபத்தை உத்தேசித்துத்தான் வேலம் மாள் வாத்தியாரம்மாள் வீட்டுக்கு வந்தாளோ என்னவோ, அவள் வாத்தியாரம்மாளின் வீட்டில்தான் இருந்தாள். அவ ளோடு பக்கத்து வீட்டுப் பெண்கள் - நடுத்தர வயதுடைய பெண்கள் - மூவரும் இருந்தனர். அவர்களில் ஒரு பெண்ணின் பெயரைச் சொன்ஞலே போதும். அவள் பெயர் கிருஷ்ணம் மாள். அவளும் விதவை.

வாத்தியாரம்மாள் பள்ளிக்கூடம் போய்த் திரும்புவதற்குள் ளாக, கேவலம் அந்த மூன்றரை மணி நேரத்திற்குள்ளாக, அவளுடைய தாயார், அந்தச் 'சாகப்போகிற' கிழவி, தன் பல்லுப்போன வாயால் தங்கள் குடும்பப் பூர்வோத்திரத்தை எல்லாம் சொல்லி, வாத்தியாரம்மாளுக்கு வைத்தியம் ஜோதி டம் முதலியன எல்லாம் தெரியும் என்றும், அத்துடன் ஏதாவது நல்ல காரியமோ கெட்ட காரியமோ நடப்பதாக இருந்தால் முருகன் முன்கூட்டியே வாத்தியாரம்மாளின் கனவில் தோன்றி அறிவிப்பது உண்டு என்றும் சொல்லி முடித்துவிட்டாள். இந்த அதிமானுஷ்ய சக்தி படைத்த காரணத்தினுல்தான் வாத்தியா ரம்மாளிடம், வந்திருந்த அத்தனை பேருக்கும் ஒரே கவர்ச்சி. அவர்களில் ஒருத்தி தன் கைரேகையை வாத்தியாரம்மாளிடம் காட்டுவோமா என்றுகூட யோசித்தாள். இருந்தாலும் தனி யாக வந்து கேட்டுக்கொள்ளலாம் என்று இருந்துவிட்டாள். அப்போதுதான் அநேக குடும்ப ரகசியங்களை எல்லாம் சொல்லி விளக்கமாகக் கேட்கச் சௌகரியப்படும் என்பது அவள் எண்ணம்.

வாத்தியாரம்மாள் அந்த ஊரில் குடியிருக்கப் பயப்படுவ தாக வந்திருந்த பெண்களிடம் கிழவி சொல்லவே, வேலம்மா ளும் கிருஷ்ணம்மாளும் 'நான் முந்தி, நீ முந்தி' என்று வாத்தியாரம்மாளுக்குப் பாதுகாப்பாக அவள் வீட்டிலேயே தங்கள் படுக்கையை வைத்துக்கொள்ளுவதாகச் சொல்லி விட்

டனர். இது வாத்தியாரம்மாளுக்குப் பிடித்ததோ இல்லையோ? வாத்தியாரம்மாளுக்குப் பிடிக்கவில்லை என்றாலும் தப்பிக்க முடியாது என்ற ரகசியம் அவளுக்கு இதற்குள் தெரிந்திருக்க வேண்டும்.

அன்றிரவே கிருஷ்ணம்மாள் வந்தாள்; அவளுக்கு முன்பாகவே, சாப்பிட்ட கையில் ஈரம் உலர்ந்தும் உலராமலும் இருக்கும்போதே வேலம்மாளும் வந்தாள்.

எல்லோரும் சுமார் பத்து மணிக்குப் படுத்தனர். கிருஷ்ணம்மாள் முதலில் தூங்கினாள். வாத்தியாரம்மாள் வேலம்மாளின் தாக்ஷண்யத்துக்காக விழித்திருந்து அவள் பேச்சைக் கேட்பதுபோலப் பாசாங்கு செய்துவிட்டு, பதினொரு மணிக்கெல்லாம் உறங்கிவிட்டாள். வேலம்மாள், பிறகும் அவர்கள் தன் பேச்சைக் கேட்டுக்கொண்டிருப்பதாக நினைத்து ஒரு அரைமணி நேரம் பேசிக்கொண்டே போனாள். கடைசியில் திடீரென்று, "வாத்தியாரம்மா! வாத்தியாரம்மா!" என்று அழைத்தாள்.

தூங்கிவிட்ட வாத்தியாரம்மாள் எழுந்திருப்பது எங்கே?

மனம் உடைந்துபோய் வலது பக்கம் திரும்பி, "பாட்டி, பாட்டி" என்று கிழவியை எழுப்பினாள்.

பதிலைக் காணோம்.

"என்ன, அதுக்குள்ளேயா தூங்கிட்டீக!" என்று பரிகாசமாக அங்கலாய்த்துவிட்டு, 'கடவுளே உண்டும்' என்று சொல்லிப் படுத்துவிட்டாள் வேலம்மாள்.

கிழவி உண்மையில் தூங்கவில்லை. வேலம்மாள் எப்போது தூங்குவாள் என்று ஜபித்துக்கொண்டுதான் படுத்திருந்தாள்.

நடுச்சாமத்தின்போது வேலம்மாள் குறட்டைவிடும் சப்தம் கேட்டது. குறட்டைவிடுவது வேலம்மாள்தான் என்பதையும் தெளிவாகக் கண்டறிந்து மனதில் நிச்சயப்படுத்திக்கொண்டாள் கிழவி பிறகு மெல்ல எழுந்திருந்தாள்; வேலம்மாளின் கால்மாட்டில் இருந்த கீழச்சுவர் மாடக் குழியில், தான் மத்தியானம் காய்கறி வாங்கிவிட்டு வைத்த மீதி இரண்டணாச் சில்லறையை, விளக்கைப் பொருத்தி அரவமில்லாமல் எடுத்து, வீட்டுக்குள்ளே கொண்டுபோய், ஓசைப்படாமல் பெட்டியைத்

திறந்து, அதிலே அந்தச் சில்லறையை வைத்துப் பூட்டினுள்; பூட்டையும் இழுத்துப் பார்த்தாள்; அப்புறம் வந்து படுத்தாள். படுத்தபின் சாவியைத் தலையணைக்கடியில் வைக்கப் போனுள். பிறகும் வேலம்மாள் விழித்திருதால் அபாயமே என்று நினைத்து அவள் முகத்துக்கு நேராக விளக்கை வைத்துப் பார்த்துத் தூங்குகிருள் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்ட பிறகுதான் தலையணைக்கடியில் பெட்டிச் சாவியை வைத்துவிட்டு விளக்கை அணைத்துப் படுத்தாள்.

'பட்டிக்காட்டுச் சனங்களை நம்பவே கூடாது. கை அநியாயமா நீளும்' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, மன நிம்மதியோடு கலவரமில்லாமல் படுத்தாள் கிழவி.

## 2

ஏறக்குறைய ஒரு மாதமாகிவிட்டது. வாத்தியாரம்மாளுக்கு ஊரும் பிடித்துப்போய்விட்டது. பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் வராததால், வாத்தியாரம்மாளுக்கு உட்கார்ந்திருக்கும்போதே தூக்கம் வருவதில் அதிசயம் இருக்க முடியாது. தூக்கம் வந்தால் மேஜையில் சாய்ந்துகொண்டு தூங்குவதில் சுகமிருக்காது. அதே நேரத்தில் சங்கடமாகவும் எரிச்சலாகவும் இருக்கும். அசோகவனத்தில் அகப்பட்டுக்கொண்ட சீதைக்குத் திரிசடை கிடைத்ததுபோல, வாத்தியாரம்மாளுக்கு வேலம்மாள் கிடைத்தாள். வேலம்மாள் பள்ளிக்கூடத்துக்கு வந்து பேசிக்கொண்டிருந்ததுடன் உறவு நின்றுவிடவில்லை. ஒருநாள் பள்ளிக்கூடத்தில் வைத்தே தன் பழைய புடவை ஒன்றைத் தைக்கவும் ஆரம்பித்து விட்டாள்.

வேலம்மாள் ஓயாமல் பேசிக்கொண்டிருந்தபோதிலும், களங்கமில்லாத வெள்ளை மனசு படைத்தவள் என்றும், சூது வாது அறியாத பெண் என்றும் வாத்தியாரம்மாள் முடிவு கட்டினுள். வேலம்மாளைப்போலவே ஊர்க்காரர்களும் எப்படியோ நல்லவர்களாக மாறிவிட்டார்கள். தவிரவும்...

கிழவி—வாத்தியாரம்மாளின் தாயார்—அந்தத் தெருவில் ஒரு வீடு பாக்கியில்லாமல் போய், "அந்தா அந்த ஊரில்

நாங்கள் இருக்கும்போது எங்களுக்குப் பால், நெய் எல்லாம் இனமாகத்தான் கொடுப்பார்கள்; இந்தா இந்த ஊரில் இருக்கும்போது நாங்கள் காசு கொடுத்து விறகு வாங்கியது கிடையாது. விறகுக் கட்டையைக் கொண்டுவந்து அம்பாரமாகக் குவித்து விடுவார்கள் அந்த ஊர் ஜனங்கள்'' என்றெல்லாம் எடுத்துவிட்ட ராக்ஷஸக் கற்பனைகளையும் உண்மை என்று நம்பிய சிலர் பால், நெய், விறகு இத்தியாதிகளைக் காசு வாங்காமலே வாத்தியாரம்மாளுக்குக் கொடுத்துவந்தனர். ஆகவே வெளியூர்களில் காசுக்கும் கிடைக்காத சரக்குகள் சில இங்கே இனமாகக் கிடைத்து வந்தன. அதில் ஒரு விதிவிலக்கு என்னவென்றால், மாதா மாதம் முதல் தேதியன்று வந்து வீட்டு வாடகைக்காக ரூபாய் மூன்றையும் தவறாமல் வாங்கிக்கொண்டு போய் விடுவார் கைலாசம் பிள்ளை. இதனால், கிழவிக்கு மனத் தாங்கல் ஏற்படாதிருக்க முடியவில்லை.

வாத்தியாரம்மாள் ஊரைப்பற்றிச் சிலாகித்துத் தன் தமையனுக்கு ஒன்றை அடுத்து ஒன்றாக இரண்டு கடிதங்கள் எழுதி விட்டாள். முதல் முதலில் எழுதிய கடிதத்துக்கும் இந்தக் கடிதத்துக்கும் உள்ள முரண்பாட்டைக் கவனித்த அந்த மனிதர் பதில் எழுதினார்: ''பழகப் பழக எந்த ஊரும் சரியாய்த்தான் போகும். பட்டிக்காட்டு ஜனங்கள் பேசுவதும் பழகுவதும் ஒருமாதிரியாக இருந்தாலும், அவர்களுக்குள்ள நல்ல குணம் யாருக்கு இருக்கும்? அவர்களை நம்பி ஆயிரம் ரூபாயைக்கூடக் கொடுத்துப் பத்திரப்படுத்தி வைக்கச் சொல்லலாமே.'' இந்த முறையில் சம்பிரமமாகப் பதில் எழுதி விட்டார் அவர்.

## 3

ஒருநாள் திடீரென்று வேலம்மாள் வந்து வாத்தியாரம்மாளிடம் கைபிடித்துப் பார்க்கச் சொன்னாள். அதற்குக் காரணம் அவளுக்கு உடம்பு அசௌக்கியம் என்பதைவிட, வாத்தியாரம்மாளுக்கு வைத்தியம் தெரிந்திருந்ததுதான். வாத்தியாரம்மாள் கைபிடித்துப் பார்த்தாள். நாடி ஓட்டம் சரியாகவே

இருந்தது. இருந்தாலும் தன் வைத்திய ஞானத்துக்கு ஏமா ளிப் பட்டம் கிடைத்துவிடக்கூடாதே என்ற பயத்தினல், "பித்தப் படபடப்பு மாதிரி இருக்கு. காலேயில் எழுந்ததும் தலே சுத்துதா?" என்று கேட்டாள். வேலம்மாள் அதை ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. ஒப்புக்கொள்ளாவிட்டால் "வேறு என்ன சீக்கு?" என்ற கேள்விக்குப் பதில் சொல்லவேண்டி வரும். "உடம்புக்கு ஒன்றும் செய்யாதபோது கையைக் காண் பிப்பது என்ன விளேயாட்டா?" என்று தாக்ஷண்யம் பார்க்கா மல் கேட்டு விடுவாள் கிழவி. இதை எல்லாம் யோசித்து, "ஆமாம். தலே சுத்துது; சாப்பாடும் சாப்பிட முடியல்லே" என்று ஒரு ஷரத்தைக் கூட்டிச் சொன்னுள். சாப்பாட்டு ரகசி யத்தைக் கைலாசம் பிள்ளேயின் சம்சாரத்திடம் போய்க் கேட் டால் உண்மை விளங்கும். அது போகட்டும். உடனே, மாலே யில், தான் ஒரு பச்சிலேயைப் பிடுங்கிக்கொண்டு வந்து பிழிந்து சாறு எடுத்து அதைக் கடை மருந்துகளோடு கலக்கித் தருவ தாகவும், அதை இரண்டு நாள் சாப்பிட்டால் பித்தம் பறந்து விடும் என்றும் சொன்னுள் வாத்தியாரம்மாள். பச்சிலேயின் பெயரை வெளியே சொன்னுல் அதனுடைய சக்தி கெட்டுவிடு மாதலால் வாத்தியாரம்மாளே போய்ப் பச்சிலே பிடுங்கிக் கொண்டு வரவேண்டியிருந்தது.

அன்று லீவு நாளானதால் மத்தியானச் சாப்பாட்டுக்குப் பிறகு, பள்ளிக்கூடத்துக்குப் போகாமல் வீட்டிலேயே உட் கார்ந்து கிருஷ்ணம்மாள், வேலம்மாள் முதலியவர்களுடன் பேசிக்கொண்டிருந்தாள் வாத்தியாரம்மாள். உண்மையில் வேலம்மாளின் பேச்சை அவள் கேட்டுக்கொண்டிருந்தாள் என்றுதான் சொல்லவேண்டும்.

மணி ஐந்தாகிவிட்டது.

பச்சிலே பிடுங்க வாத்தியாரம்மாள் வேலம்மாளேயும் அழைத்துக்கொண்டு வெளியே புறப்பட்டாள். ஊருக்கு வடக்கே உள்ள தோட்டத்தில் வெகுநேரம் சுற்றிப் பார்த்துப் பச்சிலேயைக் கண்டுபிடிப்பதற்குள் பொழுது மயங்கிவிட்டது. அந்த அந்திக் கருக்கலில், பத்திரமாகப் பச்சிலேயைப் பிடுங் கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தார்கள் இருவரும். வீட்டுக்கு

வந்து மருந்து செய்து வேலம்மாளுக்குக் கொடுத்தாள். அவ ளும் சாப்பிட்டுவிட்டு, சாதம் சாப்பிடத் தன் வீட்டுக்கு வந் தாள்.

சிறிது நேரத்தில் வாத்தியாரம்மாள் குளிக்கவேண்டும் என்று நினைத்தாள். வெகுநேரம் தோட்டத்தில் சுற்றியதால் உடம்பு 'கச கச' என்று வேர்த்து அரித்தது. குளிப்பதற்காக வெந்நீரை எடுத்து வைத்து அங்கணத்தில் உட்கார்ந்தாள். அப்போதுதான் திடீரென்று அவளுக்குத் தன் கழுத்தில் கிடந்த தங்கச் சங்கிலியைக் காணவில்லை என்பது தெரிந்தது. உடனே பயந்தடித்துக்கொண்டு தன் தாயாரைக் கூவி அழைத்தாள். கிழவி என்னவோ ஏதோ என்று பயந்து ஓடி வந்தாள். விஷயம் தெரிந்தது. அவ்வளவுதான்; வீடே திமி லோகப்பட்டது. அங்கணம், உள்கூடம், அரங்கு முதலிய இடங்களிலெல்லாம் விளக்கை வைத்துக்கொண்டு தேடினார் கள். சங்கிலி அகப்படவில்லை. வீட்டுக் கூரையிலும், உரலுக் குக் கீழும்தான் தேடவில்லை. குய்யோ முறையோ என்ற கூப் பாடு பெருத்துவிட்டது.

பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்தார்கள். கிருஷ்ணம்மாள் வந்தாள். வேலம்மாள் வராமல் இருக்க முடியாது.

"நீங்கள் பச்சிலை பிடுங்கப் போனபோதுகூட சங்கிலி கழுத்தில் கிடந்ததை நான் பார்த்தேனே?" என்றாள் கிருஷ் ணம்மாள். கிழவியும் இதுதான் உண்மை என்றாள். வாத்தியா ரம்மாள் தன்னோடு வந்தபோது சங்கிலி தொலைந்து விட்ட தால், அதன் காரணமாகத் தனக்கு அபகீர்த்தி ஏற்பட்டுவிடக் கூடாதே என்று பயந்து, "சங்கிலி கழுத்திலே கிடந்ததாக எனக்கு ஞாபகமில்லையே!" என்று ஒரு போடு போட்டாள் வேலம்மாள்.

"அப்போதே சங்கிலியைக் காணோம் என்றால், காணோமே என்று நீ ஏன் சொல்லவில்லை?" என்ற பயங்கரமான கேள்வி யைப் போட்டாள் கிருஷ்ணம்மாள்.

'இந்த எக்கச்சக்கமான நிலையில் ஏன் மாட்டிக்கொண் டோம்?' என்று விழித்தாள் வேலம்மாள்.

அப்போது தெய்வச் செயலாகக் கூட்டத்தில் நின்ற பெண் ஒருத்தி "ஒரு வேளை மாராப்புச் சீலைக்கு மறைவிலே கிடந்திருக்கும்" என்று தன் புத்திசாலித்தனத்தைக் காட்டவேண்டும் என்பதற்காகவாவது சொல்லி வைத்தாள்.

தப்பிப் பிழைத்தாள் வேலம்மாள்.

வாத்தியாரம்மாளுக்கு 'சங்கிலி எங்கே போனது?' என்பதைத் தன் ஜோதிஷ ஞானத்தினால் கண்டறிய முடியவில்லை. தன் ஜோதிஷமோ, தன் வைத்தியமோ தனக்குப் பலிக்காதாமே!

உள்ளூர் ஜோசியர் ஒருவரை உடனே தருவித்தார்கள். அவர் வந்தார். நூற்றுக்குக் கீழே ஏதாவது ஒரு தொகையைச் சொல்லச் சொல்லி அதைக்கொண்டே காணாமல்போன சாமான் இன்ன திசையில் ஒதுங்கிவிட்டது என்று சொல்லக் கூடியவர் அவர். இரண்டாவது தடவையும், நூற்றுக்குக் கீழாக ஒரு தொகையைச் சொல்லச் சொல்லி, சாமானை எடுத்தது ஆணா பெண்ணா, சொந்தக்காரர்களுக்குச் சாமான் திரும்பக் கிடைக்குமா கிடைக்காதா என்றும் சொல்லுவார். அப்படியாக அவர் அந்த வட்டாரத்தில் கீர்த்தி சம்பாதித்தவர்.

100-க்குக் கீழ் முதலாவதாகச் சொல்லப்பட்ட தொகை 71.

அதன் பலன்: சாமான் வடதிசையில் ஒதுங்கி இருக்கிறது. (வடதிசையில்தான் வேலம்மாளின் வீடு இருக்கிறது என்றும், வேலம்மாள்தான் பள்ளிக்கூடமானாலும் வீடானாலும் வாத்தியாரம்மாளை விட்டுப் பிரியாதவள் என்றும் அவருக்குத் தெளிவாகத் தெரியும்.)

இரண்டாவது தொகை 37.

அதன் பலன்: சாமான் ஒரு பெண் கைவசம் அகப்பட்டிருக்கிறது. அதுவும் அமங்கிலியின் கைவசம் அகப்பட்டிருக்கிறது. (வேலம்மாளும் பிரஸ்தாப வர்ணனைக்குள் அடங்கியவள்தான்.)

மூன்றாவது தொகை 65.

அதன் பலன்: சாமான் மூன்று நாட்களுக்குள் அகப்பட்டால் உண்டு; இல்லை என்றால் யோசித்துத்தான் சொல்ல வேண்டும்.

யோசித்துத்தான் சொல்லவேண்டும் என்ருல் கையைக் கழுவிவிட்டுப் பேசாமல் இருக்கவேண்டும் என்று பொருள்.

அந்த ஊர் வளமுறைப்படி சாணி உருண்டை கொடுக்க வேண்டும் என்று அப்போதே பஞ்சாயத்துப் பேசித் தீர்த்து விட்டார்கள். ஊர்ச் சக்கிலியன் ஒருவனை விட்டு, விடிந்ததும் எல்லோரும் சாணி உருண்டை எடுத்துக்கொண்டு வடக்குத் தெருவில் வாத்தியாரம்மாள் வீட்டுக்கு வரவேண்டும் என்று பகிரங்கமாக ஊர் முழுதும் சாட்டச் செய்தார்கள்.

சாணி உருண்டை கொடுப்பது என்ருல், ஒவ்வொரு வீட்டாரும் ஒவ்வொரு சாணி உருண்டையைக் கொண்டுவந்து வெண்கலப் பானை ஒன்றில் போடவேண்டும். சாமானை எடுத்தவர்கள் மனசு மாறி நல்லெண்ணத்துடன் எடுத்த சாமானையே ஒரு சாணி உருண்டைக்குள் வைத்துக்கொண்டுவந்து பாத்திரத்துக்குள் போட்டுவிடக்கூடும். சங்கிலியுள்ள சாணி உருண்டையும் இல்லாத சாணி உருண்டையும் வெளித்தோற்றத்தில் ஒன்றுபோலவே இருக்குமாதலால், யார் சாமானைத் திருடி, திரும்பவும் கொண்டுவந்து போட்டார்கள் என்ற ரகசியம் யாருக்கும் தெரியாமல் போய்விடும். திருடியவர் திருடாதவர்கள் மாதிரி தப்பித்துக்கொள்ளலாம்; நல்ல காரியத்தையும் செய்துவிடலாம். மனிதனுடைய அனுதாப உணர்ச்சியை நம்பிச் செய்த ஏற்பாடு இந்தச் சாணி உருண்டை கொடுக்கும் முறை.

விடிந்ததும் பாத்திரத்தில் சாணி உருண்டைகள் வந்து விழுந்துகொண்டே இருந்தன. கடைசி உருண்டையும் விழுந்துவிட்டது. இனி அந்த ஊரில் பாக்கி உருண்டை கிடையாது. பத்துப் பேர் முன்னிலையில் பாத்திரத்தில் ஒரு குடம் தண்ணீரைவிட்டுக் கலக்கிப் பார்த்தார்கள். கையால் நசுக்கிப் பார்த்தார்கள். எப்படியாவது சங்கிலி அகப்பட்டு விட்டால் தான் தப்பித்துவிடலாம் என்ற தவிப்பு வேலம்மாளுக்கு.

சன்னமான சங்கிலி ஒருவேளை கைக்குத் தட்டுப்படாமல் இருக்கக்கூடும் என்று நினைத்து சாணித் தண்ணீரைக் கொஞ்சம் கொஞ்சமாக எண்ணெயை வடிப்பதுபோல அவ்வளவு பய

பத்திரமாகத் தரையில் கொட்டினர்கள். தரையில் சாணித் தண்ணீர் ஓடத் தொடங்கியது. கடைசித் துளி தண்ணீரையும் கொட்டிவிட்டுப் பாத்திரத்துக்குள்ளே ஒருவர் எட்டிப் பார்த்தார். பாத்திரத்தின் தூரிலே எட்டிப் பார்த்தவரின் முகம்தான் பிரதிபலித்தது.

"யானை வாயிலே போன கரும்பு மீளுமா?" என்று சொல்லிவிட்டு நல்ல தண்ணீரில் கையைக் கழுவப்போனர் சாணியைக் கரைத்து அவதிப்பட்ட மனிதர்.

அங்கு நின்ற கூட்டத்தில் ஒவ்வொருவரும் நிமிஷத்துக்கு ஒருமுறை வேலம்மாளை எட்டிப் பார்க்கவும், வேலம்மாள் தம் பக்கம் திரும்பினல் தலையைக் குனிந்து அவளைப் பார்க்காதது போல நடிக்கவும் தொடங்கினர். வேலம்மாளுக்குப் பயம் நடுக்கியது. இந்த நேரத்தில் கிழவி அத்தனை ஜனங்களுக்கும் கேட்கும்படியாக, "யாரை ஏமாத்திலும் முருகனை ஏமாத்த முடியாது. முருகனுக்குக் கண் இருந்தா இன்னிக்கு ராத்திரியிலேயே உண்மை தொலங்கணும்" என்ருள்.

எல்லோரும் அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். வேலம்மாளோ கிருஷ்ணம்மாளோ அன்று வாத்தியாரம்மாள் வீட்டுக்குப் படுக்க வருவார்கள் என எதிர்பார்ப்பது அசம்பாவிதம். வாத்தியாரம்மாள் அன்று தன் அண்ணனுக்கு எழுதிய கடிதத்தில், "கூடப் பழகிக்கொண்டே, சாமானைத் திருடி விட்டார்கள் இந்த ஊர்ப் பாவிகள். இது ரொம்பவும் ஆபத்தான இடமாக இருக்கிறது. எப்படியும் மாற்றுதலுக்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஜோசியர் சொன்ன ஒன்றுதான் எனக்கும் அம்மாவுக்கும் ஆறுதலாக இருக்கிறது. அதாவது மூன்று நாட்களுக்குள் சாமான் அகப்படலாம் என்று சொன்னர்" என்று எழுதி ஊரைப்பற்றி ஆரம்பத்தில் வர்ணித்ததுபோல அவ்வளவு பயங்கரமாக வர்ணித்து எழுதிவிட்டாள்.

கண்ணில் தட்டுப்பட்டவர்களிடமெல்லாம் 'மூன்றரைப் பவுனுக்குச் செய்த தங்கச் சங்கிலியைக் காணும்' என்று மத்தியானம் வரைக்கும் புலம்பிக்கொண்டிருந்தாள் கிழவி. அப்படி என்ருல் மத்தியானத்துக்குப் பிறகு பேசாமல் இருந்தாள் என்று அர்த்தமல்ல. மத்தியானத்துக்குப் பிறகு சரியாக

நாலு பவுனுக்குச் செய்த சங்கிலி என்று பிரலாபித்தாள். அசல் சங்கிலியோ...

இப்படியே அன்றையப் பொழுது கழிந்தது.

மறுநாள் காலையில், பச்சிலை பிடுங்கிய பழைய தோட்டத்துப் பக்கம் காலைக்கடன் நிமித்தமாய்ப் போன வாத்தியாரம்மாளின் கண்ணில் ஒரு செடிக்குக் கீழே தன் தங்கச் சங்கிலி கிடந்தது தென்பட்டது. இழந்த கண்ணைத் திரும்பப் பெற்றது போல சங்கிலியைக் கையிலெடுத்தாள் வாத்தியாரம்மாள். சங்கிலியின் ஒரு கண்ணியிலுள்ள பொருத்துவாய் விடுபட்டுப் போயிருந்ததால், சங்கிலி நழுவி, பச்சிலை பிடுங்கும்போது விழுந்துவிட்டது. உடனே வாயுவேக மனோவேகத்துடன் சங்கிலியோடு வீடு வந்து சேர்ந்தாள். சுமார் அரைமணி நேரத்துக்குள்ளாக ஊர் முழுவதும் செய்தி பரவிவிட்டது. வேலம்மாளைப் பிடித்த கிரஹணம் விலகியது. "அப்பாவிப் பெண்ணை இல்லாததும் பொல்லாததும் சொன்னார்களே" என்று அந்த ஊரில் ஒரு ஆள் பாக்கியில்லாமல் சொன்னார்கள். ஆகவே, இல்லாததும் பொல்லாததுமாகச் சொன்னவர்கள் யார் என்பதைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதாய் விட்டது.

இந்தச் சமயத்தில்தான் வாத்தியாரம்மாளும் வாத்தியாரம்மாளின் தாயாரும் ஒரு ஹிமாலயத் தவறு செய்துவிட்டார்கள். அதாவது, முருகன் முதல் நாளிரவில் கனவில் வந்து சொன்னதனால்தான் தங்கச் சங்கிலியைக் கண்டுபிடித்து எடுக்க முடிந்தது என்று சொல்லத் தவறிவிட்டார்கள். இந்த விஷயத்தை நன்றாக மனதில் பதிய வைத்துக்கொண்டாள் வேலம்மாள். அத்துடன் மற்றொரு தவறும் சேர்ந்து கொண்டது.

வேலம்மாள் ஊரறிய 'நீண்ட கைக்காரி' என்று பெயர் வாங்கி, பிறகு திடீரென்று அந்தக் கெட்ட பெயர் மாறிவிட்டதால் அவளை அரிச்சந்திர வார்ப்பில் வார்த்து எடுத்து விட்டார்கள் வாத்தியாரம்மாளும் அவள் தாயாரும்.

வேலம்மாளைப் பார்த்து வாத்தியாரம்மாளே ஒருநாள் சொன்னாள்:

"ஊரெல்லாம் உங்களைப்பற்றி என்னென்னவோ சொன்னார்கள். நான் யார் பேச்சையும் நம்பல்லே. சங்குக்கும் முட்டைக்கும் வித்தியாசம் தெரியாமலா போகும்?"

வேலம்மாளுக்குப் 'பரம சந்தோஷம்.'

வாத்தியாரம்மாள் சங்கிலி கிடைத்த விவரத்தைத் தன் அண்ணனுக்கு விரிவாக எழுதினாள். வீணாக வேலம்மாளைச் சந்தேகப்பட்டதாகவும் எழுதினாள். வேலம்மாள் நல்லவளாகி விடவே, ஊரும் நல்ல ஊராகிவிட்டது வாத்தியாரம்மாளுக்கு. ஆகவே ஊரார்களைப்பற்றி சிலாகித்தும் எழுதிவிட்டாள்.

## 4

வாத்தியாரம்மாள் இந்த ஊருக்கு வந்து இப்போது இரண்டு மாதம் எட்டு நாளாகிறது...

வெள்ளிக்கிழமை...

மாலை ஐந்தரை மணி...

எண்ணெய் ஸ்நானம் செய்வதற்காகத் தயார் செய்து கொண்டிருந்தாள் வாத்தியாரம்மாள். வேலம்மாள் வழக்கம் போல் அங்கே வந்து உட்கார்ந்திருந்தாள்.

வாத்தியாரம்மாள் காதில் போட்டிருந்த வெள்ளைக் கல் கம்மலைக் கழற்றினாள். எண்ணெய் ஸ்நானம் செய்யும்போது போட்டிருந்தால் கம்மலில் எண்ணெய் இறங்கிவிடுமல்லவா?

கம்மலைக் கழற்றுவதை வேலம்மாள் பார்த்தாள். கம்மலைக் கொண்டுபோய் வீட்டுக்குள்ளே பெட்டிக்குள் வைத்ததையும் பிறகு பெட்டியைப் பூட்டாமலே வந்து வாத்தியாரம்மாள் எண்ணெய் ஸ்நானம் செய்யப் போனதையும் பார்த்தாள்.

இரவு பத்து மணிக்கெல்லாம் எல்லோரும் படுத்து உறங்கி விட்டதையும் பார்த்தாள்.

எல்லோரும் உறங்கிவிட்டனர்—அதாவது வாத்தியாரம்மாளும் அவள் தாயாரும் உறங்கி விட்டனர். கிருஷ்ணம்மாள் அன்று ஊரிலேயே இல்லை. வேலம்மாள் பாலுக்குக் காவல் காத்த பூனையைப்போல் சிறிதுநேரம் கண்ணை மூடிக் கொண்டிருந்தது மெய்தான்.

'முருகன் கனவில் வருவது பெரிய புரட்டு.'

'இனி நம்மைக் கெட்டவள் என்று சொல்ல எவளுக்கும் வாய் வராது.'

இந்த உறுதிகளுடன் காலை ஆறு மணிக்கு வழக்கம்போல் தன் வீட்டுக்குப் போனாள் வேலம்மாள்.

காலை எட்டு மணிக்கு வழக்கம்போல் பள்ளிக்கூடத்துக் குப் புறப்பட ஆயத்தமானாள் வாத்தியாரம்மாள்.

பெட்டியைத் திறந்தாள். கம்மல்...

கம்மலைக் காணோம்!

## 5

சாணி உருண்டை கொடுத்துக்கொண்டே இருந்தால் கேலிக் கூத்தாகப் போவதோடு சாணிக்கும்கூடப் பஞ்சமாய்ப் போய்விடும்.

'முருகன் உபாயம்' இனிப் பலிக்காது. 'முன்னால் கனவில் வராத முருகன் இப்போது எப்படி வந்தான்?' என்று கேட்பது ஊராருக்குக் கஷ்டமான காரியமல்ல.

நேற்று வரைக்கும் நல்லவளாக இருந்த வேலம்மாளை இன்று கெட்டவளாக்குவதோ நடக்காத காரியம்.

உத்தியோக முறையில் பார்த்தால், இனிப் பதினைந்து நாளில் வருஷாந்திர இன்ஸ்பெக்ஷன். பள்ளிக்கூடத்துக்குப் பிள்ளைகள் வரமாட்டார்கள். இத்தனை நாளும் ஒருநாள்கூட லீவு எடுக்காத பிள்ளைகள் இன்ஸ்பெக்ஷனுக்கு மட்டும் வர வில்லை என்று சொன்னால், இன்ஸ்பெக்டர் அம்மாள் ஒப்புக் கொள்ள மாட்டாள் என்பது வெள்ளிடைமலை. பள்ளிக் கூடத்தை ஒரேயடியாக இழுத்து மூட ஏதாவது செய்துவிட்டு, தான் வேற்றூருக்கு மாற்றிப் போய்விடலாம் என்றால், அது கைலாசம் பிள்ளை தலையுள்ள மட்டும் நடைபெற முடியாத சமாச்சாரம். முன்னால் இப்படிப் பள்ளிக்கூட அடைப்புக்கு யோசனை செய்த ஒரு வாத்தியாரம்மாளின் நடத்தையைப் பற்றிக் கதைகள் கட்டி ஊரில் பிரசாரம் செய்ததோடு, கல்வி அதிகாரிகள் வரை மனுவும் போட்டு வெற்றியும் கண்டவர் பிள்ளை.

வாத்தியாரம்மாள் எல்லாவற்றையும் யோசித்தாள். அவளுக்குத் தப்பிப் பிழைக்க ஒரே உபாயம்தான் இருந்தது. அதாவது தன் அண்ணனுக்குக் கடிதம் எழுதுவது. விருத்தாந்தம் முழுவதையும் எழுதினாள். தன் அம்மாவின் அபிப்பிராயம் அறியாமலே தன் சார்பிலும் அம்மாவின் சார்பிலும், ''இந்தப் படுபாவி ஊரைவிட்டு மாற்ற ஏற்பாடு செய்யாவிட்டால் நானும் அம்மாவும் கிணற்றிலே விழுந்து செத்துப்போய்விடுவோம்'' என்று பெண்மைக்குரிய கடைசி எச்சரிக்கையையும் செய்து கடிதத்தை முடித்தாள்.

# புது உலகம்

பழையபடியும் நான் என் சொந்த ஊருக்கு வந்து ஒரு வருஷமாகிறது. போன வருஷத்தோடு என் பள்ளி வாழ்க்கையும் முடிந்துவிட்டது. அதற்கு முன்னால் சுமார் ஆறு வருஷ காலம் திருநெல்வேலியில் படித்துக்கொண்டிருந்தேன். என்னோடு படித்தவர்களில் என் நண்பர்களாயுள்ள இரண்டொருவர், சர்க்கார், ரயில்வே முதலியவற்றில் உத்தியோகங்களைத் தேடி அமர்ந்துகொண்டார்கள். என்னைவிட அவர்கள் கெட்டிக்காரர்கள். என்னை முந்திக்கொண்டார்கள். சிலர் சொல்லுகிற மாதிரி "முன்னால் ஒருநாளைக்கு ஒரு சுற்றுச் சுற்றும் உலகம் இப்பொழுது அதி விரைவோடு ஆயிரம் சுற்றுச் சுற்றும் போது" என் காரியாதிகளை நான் சாவகாசமாகச் செய்துகொண்டிருந்தால் மற்றவர்கள் என்னை முந்திக்கொண்டதில் ஆச்சரியம் என்ன?

என்னுடன் படித்த என் ஆப்த நண்பர்களில் யாரும் தற்சமயம் திருநெல்வேலியில் இல்லை. என்றாலும், பழகின முகங்கள், அனுபவித்த இயற்கைக் காட்சிகள், சினிமா, நாடகம்—இவற்றில் எல்லாம் பற்றுதல் கொண்டல்ல, நான் வாரத்துக்கு ஒருமுறையாவது திருநெல்வேலிக்கு நடந்தே செல்வது. ஏன் செல்கிறேன் என்பதைப் பின்னால் சொல்லுகிறேன்.

நடந்துதான் எங்கள் ஊருக்குச் செல்ல முடியும். அது திருநெல்வேலியிலிருந்து ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது. தாமிரபரணி ஆற்றை யொட்டியே நீரோட்டத்தையும், நெற்பயிரின் அலையாட்டத்தையும் பார்த்துக்கொண்டே இலேசாகத் திருநெல்வேலிக்கு வந்து விடலாம்.

திருநெல்வேலியில் ஜன சந்தடி அதிகமில்லாத ஒரு பகுதி. ஹோட்டல்களுக்குப் பால் விற்றும், தயிர் மோர் ஆகியவற்றை விற்றும் பிழைக்கக்கூடிய ஜனங்கள் அந்தப் பக்கத்தில் வசித்து வருகிறார்கள். அங்கே ஒரு 'பிராஞ்ச்' கடையை ஆரம்பித்து பருத்தி விதை வியாபாரம் செய்துகொண்டு வந்தார் சண்முகம்

பிள்ளை. அந்த 'பிராஞ்ச்' கடையில் வேலை செய்துகொண்டிருந்த சங்கரன் செட்டியார் எனக்குப் பழக்கமானவர். அந்தக் கடையில் பருத்தி விதை, கடலைப் பிண்ணாக்கு, தவிடு முதலியவற்றை விற்பனை செய்து வந்தார். நான் பள்ளிக்கூடத்துக்குப் போகும்போதும் வரும்போதும் அந்தக் கடைக்கு முன்பாகத்தான் செல்லவேண்டும். மத்தியானம் பள்ளிக்கூடத்திலிருந்து வரும்போதும் அந்தக் கடையில் உட்கார்ந்து பத்திரிகை படித்துவிட்டு வீட்டுக்குச் செல்வேன். இதன் மூலமாகத்தான் அவர் எனக்கு அறிமுகமானார்.

தவிரவும் லீவு நாட்களில் நான் அங்கேதான் போய் உட்கார்ந்து கொண்டிருப்பேன். பருத்தி விதை வியாபாரம் மாலை ஐந்து மணியிலிருந்து இரவு பத்து மணி வரையிலும் நடக்கும். மற்ற நேரங்களில், குறிப்பாக சந்தை நாட்களில், வெளியூர் வாசிகளே ஏகதேசமாக சாமான் வாங்க வருவார்கள். ஆகவே, நாங்கள் இருவரும் பகலெல்லாம் உலகத்தைத் திருப்பி ஒரு லட்சிய ஸ்தானத்தில் நிறுத்தப் போகிறவர்கள் மாதிரி தத்துவ சம்வாதம் செய்துகொண்டு இருப்போம். அவருக்கு இலக்கியத்தில் ஈடுபாடும் பரிச்சயமும் உண்டு. அதனால் எங்கள் பேச்சுக்கு ஓய்வு ஒழிவு இல்லாமல் போய்விட்டது. கம்பரின் கற்பனை, பாரதியின் மறுமலர்ச்சி, சங்கப் புலவர்களின் மனோதர்மங்கள், மனித வாழ்க்கையின் சாரத்தைப் பிழிந்து உருவாக்கிய சிறு கதைகள், இலக்கிய வளர்ச்சிக்குச் சமூக வாழ்வு நல்ல நிலையில் அமையவேண்டிய அவசியம்—எல்லாம் எங்கள் பேச்சில் தினந்தோறும் அடிபட்டுப் போய்த் திரும்பவும் வந்து புகுந்துகொண்டே இருக்கும்.

அவருடைய கடை 'ஒரு நாளைக்கு ஒரு சுற்றுச்' சுற்றும் உலகத்தில் இருந்தது. அதற்கு ஒரு சான்றாக அந்த இடத்தில், ஒன்றிரண்டு தகரம் போட்ட வீடுகள், கொல்லம் ஓடு போட்ட கூரைகள் தவிர மற்ற வீடுகள் எல்லாம் நாணற்புல் வேய்ந்த கூரை வீடுகளாகக் காட்சி யளித்துக்கொண்டு இருக்கின்றன. அந்தப் பக்கத்து வாசிகளுடைய வாழ்க்கையின் தன்மை அக்பர் ராஜ்யத்திலும் சரி, ஆங்கில சாம்ராஜ்யத்திலும் சரி, உயரவும் இல்லை; தாழவும் இல்லை. அவர்களின் நட

மாட்டத்தின் கதியும் மாறுதலடைந்து வேகமடையக் காரணம் இல்லை யல்லவா?

முன்னால் சொன்னமாதிரி இப்பொழுது என் சொந்த ஊருக்கு வந்துவிட்டேன். ஒரு வருஷ காலமாக எத்தனையோ புத்தகங்கள் படித்தேன். என்னுடைய ஊரும் 'ஒரு நாளைக்கு ஒரு சுற்றுச் சுற்றும் உலகின்' ஒரு மூலையில் அடங்கி ஒடுங்கிப் போய்க் கிடக்கிறது. என் ஊரும் என்னைப்போல் ஒரு சோம்பேறி முடம். என்றால் அந்த ஊரையே வளைய வளைய வருவதைத் தவிர, வெளியேறிப் போய்ப் புது உலகின் நாகரிகத்தில் கலக்கமுடியவில்லை. ஹோட்டல்கள், சினிமாக்கள், ஆபீஸ்கள், மில்கள், மாடகூடங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொரு ஊரும் தன்னகத்தில் உண்டாக்கிக்கொண்டிருக்க, என் ஊர் பழைய பட்டிக்காடாகவே இருக்கிறது.

என்னிடத்தில் ஒரு சுபாவம் உண்டு. அதாவது நான் பார்த்த அதிசயங்களையோ, படித்தறிந்த விஷயங்களையோ பிறரிடம் சொன்னால்தான் தூக்கம் வரும். ஆனால் என் பேச்சுக்குக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டு இருந்தால் எங்கள் ஊர்வாசிகளின் காலம் ஓடவேண்டுமே? அதனால்தான் வாரத்துக்கு ஒரு முறையாவது திருநெல்வேலிக்குச் சென்று சங்கரன் செட்டியாரிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டு வருவேன். அவருக்காகத்தான் நான் அங்கே செல்வது. எங்கள் இலக்கிய சர்ச்சை இப்படியே சுமார் ஆறுமாத காலம் நடந்து கொண்டு வந்தது. ஆனால் அவரோ திடீர் என்று என்னை உதறித் தள்ளிவிட்டு, நான் என் உண்மைச் சொரூபத்தோடு புகுவதற்கு இயலாத அந்தப் புது உலகத்திற்கு, 'ஆயிரம் சுற்றுச் சுற்றும்' உலகத்திற்குப் போய்விட்டார். அவர்மேலும் குற்றம் இல்லை. உலகத்தின் சுழற்சியால் உண்டான சுழல்காற்றில் துரும்புபோல அகப்பட்டுக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது.

விஷயம் என்னவென்றால், சரக்குகள் சீக்கிரம் விற்பனையாகவில்லை என்று தம் 'பிராஞ்ச்' கடையை மூடிவிட்டார் சண்முகம் பிள்ளை. அதனால் செட்டியார் தம் வேலையை இழந்தார். இதற்கு யாரைத்தான் குற்றம் சொல்லமுடியும்? மனித

னுக்கு ஆகட்டும், பொருள்களுக்கு ஆகட்டும், வேகமான இயக்கமும் நடமாட்டமும் இல்லாவிட்டால் இந்தப் புது உலகில் பலன்களை எதிர்பார்க்க முடியாது அல்லவா?

கடைசியில், சங்கரன் செட்டியாரின் மூத்த தமையனூர் அவருக்குக் கொஞ்சம் பண உதவி செய்து திருநெல்வேலி ஜங்ஷனில் ஒரு வெற்றிலை பாக்குக் கடை வைத்து வியாபாரம் செய்யச் சொன்னூர். அன்று முதல் தம் மனதுக்கு ஒவ்வாமல் வெற்றிலை பாக்குக் கடையை நடத்தி வருகிறூர் செட்டியார். அவர் இப்படிக் கஷ்டமான நிலையை அடைந்ததற்குக் காரணம் அவரேதான்.

திருநெல்வேலியில் நான் படித்துக்கொண்டிருந்த சமயம். அப்போது அங்கேயுள்ள மிராசுதார் ஒருவர், அந்த வருஷம் அறுவடைக் காலத்திலிருந்து தென்காசிப் பக்கத்தில் உள்ள தம் நன்செய் நிலங்களை மேற்பார்த்துக்கொள்ள நம்பிக்கையுள்ளவராகவும், சாமர்த்தியம் உடையவராகவும் இருக்கும் ஒருவரை நியமித்துவிடலாம் என்று எண்ணியிருந்தார். அவருக்கும் செட்டியாருக்கும் ஒரு வகையில் அறிமுகமாகி இருந்தது. அதனுல் அவரிடம், ஆள் தேவையாய் இருக்கும் சமயத்தில் தமக்குத் தகவல் கொடுக்கவேண்டும் என்று செட்டியார் தெரிவித்திருந்தார். அவரும் சரி என்று உறுதி கூறினூர். சிறிது நாட்கள் கழித்து நானும் செட்டியாரும் சந்தர்ப்பவசமாக அந்த மிராசுதார் வீட்டுக்குப் போக நேர்ந்தது. அப்பொழுது மேற்படி வேலைக்கு முன்னமேயே ஒரு ஆளை நியமித்து விட்டார் என்று எங்களுக்குத் தெரிய வந்தது. அது விஷயமாய் அவரிடம் விசாரித்ததில், ''என்ன செய்கிறது ஐயா? எனக்குப் பல அவசர ஜோலிகளிடையில் ஞாபகம் இருக்குமா? அடிக்கொரு தடவை வந்து நீங்கள் ஞாபகப்படுத்திக்கொண்டு இருக்க வேண்டும். உங்கள் நினைவு இல்லாமல்தான் நெல்லையப்ப பிள்ளையை அமர்த்தி விட்டேன். வேலைக்காகவே அடிக்கடி அவர் எங்கள் வீட்டுக்கு வருவதும் போவதுமாக இருந்தார். அவரைப்போல் எதற்கும் நீங்கள் முந்திக்கொள்ள வேண்டும்'' என்றூர்.

சங்கரன் செட்டியாருக்கு நம்பிக்கை பாழாகி மனம் உடைந்துபோயிருக்கும் என்று நான் நினைத்துக்கொண்டேன். எனக்கும்கூட ஏமாற்றமாக இருந்தது.

கடைசியில் இருவரும் திரும்பி வந்தோம். வரும் வழியில் செட்டியார் என்னிடம் சற்று மனதைத் தேற்றிக்கொண்டு, “எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் நெல்லையப்ப பிள்ளை, ஒரு வேலையும் இல்லாமல் பிள்ளை குட்டிகளோடு சாப்பாட்டுக்கே கஷ்டப்பட்டுக்கொண்டு இருந்தார். அவருக்கு முந்தி நாம் வேலை ஏற்றுக்கொண்டிருந்தால் அவர் பட்டினி கிடந்து சாக நேர்ந்திருக்கும்” என்றார்.

“இந்த வேதாந்தத்தால் என்ன பிரயோஜனம்? சோற்றுக்குத் திண்டாடும் நூற்றுக்கணக்கான ஆட்கள் ஒரு வேலைக்கு ‘அப்ளிகேஷன்’ போடுகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அப்போது பணக்காரர்கள் உத்தியோகத்தைத் தேடாமல் பேசாமல் இருக்கிறார்களா? நீங்கள் சொல்லுகிறபடி பார்த்தால் முன்கூட்டி அவசரப்பட்டு வேலை தேடிக்கொள்ளும் ஒருவனுக்கு ஆயிரம் தூக்குப் போட்டாலும் ஏற்கும். எத்தனை பேர் வேலை கிடைக்காமல் தற்கொலை செய்தோ பட்டினி கிடந்தோ சாகிறார்கள்! ஆகவே முன் கூட்டி வேலை தேடிக் கொள்கிறவன் குற்றவாளிதானே? இந்த நியாயம் பேசினால் உலகம் ஏற்றுக்கொள்ளுமா?” என்று கேட்டேன்.

செட்டியார் பேசாமல் நடந்து வந்தார்.

பிறகு ஏழெட்டு மாதம் பருத்தி விதைக் கடையில் இருந்தார் செட்டியார். அப்புறம் வெற்றிலைபாக்குக் கடை வைத்தார். இப்போது வாரத்துக்கு ஒரு முறையாவது சென்று அந்தக் கடையில் உட்கார்ந்து செட்டியாரோடு பேசிக்கொண்டு இருப்பேன். நாங்கள் பேசக்கூடிய பொருளும் ஏவலும் சரியாகவே அமைந்திருந்தன. ஆனால் இடம் மட்டும் பொருத்தமாக அமையவில்லை. ஏனென்றால் அந்த இடம் புது உலகத்தில் அல்லவா இருக்கிறது? முன் போலவே ஏதாவது இலக்கிய சம்பந்தமாகப் பேசத் தொடங்கினால் அதற்கு எத்தனையோ தடங்கல்கள். சில சமயங்களில் அழகான செய்யுளைப் பாதி சொல்லியிருப்பேன். அப்போது ஒருவர் வந்து, “காலணாவுக்கு

வெற்றிலேயும் பாக்கும்; சீக்கிரம்'' என்பார். அப்போது எனக்கு எரிச்சலாக இருக்கும். செட்டியாருக்கு ஒரு கண் அழும்; ஒரு கண் சிரிக்கும் வந்தவருக்குச் சாமானேச் கொடுத்துவிட்டு என்னேப் பார்ப்பார். நானும அந்தச் செய்யுளேச் சீக்கிரம் சொல்லிவிடவேண்டும் என்று படபடப்பாகச் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, வந்தவர் மேலும், ''இன்னெரு பாக்குக் கொடும் ஐயா. எல்லாம் ரொம்ப சின்னப் பாக்காக இருக்கு'' என்று கோபத்தோடு என்னேப் பார்த்துவிட்டுச் சொல்லுவார்.

கடைசியில், அவருடைய காரியம் முடிந்ததும் போய் விடுவார்.

நான் அடுத்த நபர் வருவதற்கு முன்னுலேயே என் அரை குறைப் பாட்டைச் சொல்லி அதற்கு நான் கண்ட விசேஷ அர்த்தத்தையும் சொல்லி விடவேண்டும். அந்தப் புது உலகில் பிரவேசிக்கப் போய் என் இலக்கிய விவகாரத்துக்கும் வேகம் கொடுக்க வேண்டியதாய்விட்டது. ஆனுல் அவசரமும் பதற்றமும் சேர்ந்தால் கவிதா ரசனே எங்கே? என் பழைய உலகின் இன்பங்களேப் புது உலகில் அனுபவிக்க இயலவில்லே. பாலேநிலத்தில் நெல் விதைக்க முடியுமா?

அன்றெரு நாள் சில மர உத்தரங்கள் வாங்க வேண்டும் என்று என் தகப்பனுர் என்னேயும் திருநெல்வேலிக்கு அழைத்துச் சென்ருர்; இருவரும் மரக் கடைக்குப் போனேம். அந்தக் கடைக்காரர் எங்களுக்கு அறிமுகமானவர். அவர், அப்போது மரச் சாமான்களுக்கு ரொம்ப 'டிமாண்டு' இருப்பதாகவும், தம் கைவசம் உத்தரங்கள் இருப்புக் கிடையாது என்றும், அன்று மத்தியானம் ஒரு மணிக்கு உத்தரங்கள் தம் கடைக்கு வந்து இறங்குவதால் எங்களே அந்த நேரத்திற்கு வரும்படியும் சொன்ஞர். அதனுல் என் தகப்பனுர் வக்கீல் வீட்டுக்கு ஒரு ஜோலி யின் நிமித்தம் போனுர். நான் செட்டியார் கடைக்கு வந்தேன்.

காலே ஆறு மணி முதல் இரவு பன்னிரண்டு மணி வரையில் அவருக்கு ஒரே பரபரப்பு. அவசர உலகத்தை அவர் கடை பிரதிபலித்துக்கொண்டு இருந்தது. அப்போது அவசரமாக ஒருவர் வந்தார். அவர் ஒரு கம்பெனியின் குமாஸ்தா

என்று தெரிய வந்தது. அவர் அவசர அவசரமாக 'ஒரு சோடாக் கொடும்' என்று கேட்டார்.

அப்போது பக்கத்துக் கடையில் இருந்த ஒருவர், "ஏது அவசரமாயிருக்கே?" என்று அந்தக் குமாஸ்தாவைப் பார்த்துக் கேட்டார.

"இன்னிக்குப் புரொப்ரைட்டர் மெட்ராஸுக்குப் போருர். அதனுல் அவரிடம் சீக்கிரம் அக்கௌண்ட்ஸை முடிச்சுக் கொடுத்துடணும்" என்று சொல்லிவிட்டுச் சோடாவைக் குடித்தார். அவ்வளவுதான்; சிட்டாகப் பறந்து விட்டார்.

நான் செட்டியாரைப் பார்த்து, "நீங்கள் வேறு ஏதாவது ஒரு தொழில் செய்யக்கூடாதா? பேசுவதற்கும், உட்காருவதற்கும், மூச்சு விடுவதற்கும்கூட நேரமில்லாமலா இருப்பது?" என்று கேட்டேன்.

அவர் சிரித்துக்கொண்டே, "வேறு என்ன தொழில் செய்ய?" என்று சொல்லிவிட்டுத் தன்னுணர்வில்லாமல் வீதியைப் பார்த்தார். நானும் என் முகத்தை வேறுபுறமாகத் திருப்பி, ஒருவித நோக்கமும் இல்லாமல் அடுத்த கடையைப் பார்த்தேன். அங்கே ஒருவர் பத்திரிகை படிக்கும்போது, 'உடனடியான பிரச்னையைத் தீர்க்கத் தாமதம் இல்லாமல்...' என்று வாசித்த சொற்கள் என் சிந்தனைகளைக் கிளறி விட்டன.

'தெய்வமே! இந்த உடனடியான பிரச்னையைத் தீர்த்ததும் உலகம் அமைதியோடு உட்கார்ந்துவிடப் போகிறதா, என்ன? எதற்கு இந்த அவசர நடமாட்டம்? சீக்கிரமாகக் காரியத்தை முடித்ததும் நிம்மதியாக வாழப் போகிருர்களா? என்ன அர்த்தமற்ற அவசரம்! குமாஸ்தாவுக்கும், முதலாளிக்கும் ஒரே அவசர கதி! இந்த அவசர வேலைகளின் பலன்கள் எல்லாம் எந்தப் பெரும் பூதத்திற்கு இரையாகப் போகப் போய், மேலும் மேலும் அவசரம் முளைத்துக்கொண்டே இருக்கிறது? இன்றும் இந்த வேகம்தான்; நாளையும் இந்த வேகந்தான்; இதே வேகந்தான் வருஷக் கணக்காய் இருந்துகொண்டே வருகிறது. இதிலிருந்து விடுபட்டு மனித வர்க்கம் பிரச்னை நீங்கி அலுப்பாறப் போவது என்ருே?...'

சங்கரன் செட்டியார் என்னைப் பார்த்து, ''உங்கள் அப்பா வருகிறார்'' என்றார். சிந்தனை கலைந்து முகத்தைத் திருப்பினேன். என்னையும் அந்த அவசரம் பீடிக்கப் பார்க்கிறது போலும்! என் பழைய உலகத்திற்கே நான் போய்விடவேண்டியதுதான். என் தகப்பனார் வந்து கோபத்தோடு என்னைப் பார்த்து,

''உன் பாட்டுக்கு இங்கே வந்து உட்கார்ந்து கொண்டால் மரக்கடைக்குப் போகிறது எப்பொழுது? எவ்வளவு நேரம் ஆய் விட்டது? உம், எழுந்திரு; செய்யவேண்டிய வேலையைக் காலா காலத்தில் செய்து முடிக்க வேண்டாமா?'' என்றார்.

'செய்து விட்டதும் கவலையெல்லாம் தீர்ந்துபோய் விட்டதாக்கும்?' என்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்தேன்.

# காடாறுமாதம்

அந்த வருஷம் கார்த்திகை மாதத்தில் செல்லையாவும் நானும் திருவனந்தபுரம் போய் வரலாம் என்று புறப்பட்டோம். இந்தியாவின் பூங்காவனம் என்று குறிப்பிடப்படும் அந்தப் பிரதேசத்தைக் காணவேண்டும் என்ற ஆசை வெகு நாட்களாக மனதில் ஊறிக்கொண்டிருந்தது; காண்பதற்குச் சந்தர்ப்பமும் கிடைத்தது.

முதலில் திருவனந்தபுரம் விஜயம். அந்தக் கற்பனையூரின் சௌந்தரிய தரிசனத்தில் எங்களுக்கு ஒரே ஆனந்தம். கட்டணம் வசூலித்துக் காட்டக்கூடிய ஒரு அலங்காரமான நாடக அரங்கம்போல இருந்தது அந்த நகரத்தின் இயற்கைத் தோற்றம். நகரத்தின் ஒவ்வொரு பகுதியும் வேண்டுமென்றே அழகாக இருக்கவேண்டும் என்று பிடிவாதம் பிடித்துக்கொண்டு இருந்ததுபோன்ற அநியாயமான அழகு! இப்படிப்பட்ட காட்சியைக் காணும்போது ஆனந்தத்துக்கு என்ன பஞ்சம்? ஆனால் ஆனந்தத்தோடு எங்கள் அனுபவம் நின்றுவிடவில்லை...

கல்லான அகலிகை ராமனுடைய திருவடி ஸ்பரிசத்தால் உயிரும் உணர்ச்சியும் பெற்று எழுந்த கதையைப் படித்திருக்கிறோம். அதேபோல, இந்தப் புது ஊருக்கு வந்தவுடன் எங்கள் உள்ளத்திலும் உடலிலும் புதுப் புதுச் சக்திகள் புதுப்புது உணர்ச்சிகள் உண்டாகி உயிர்பெற்று நாட்டியமாடுவது போன்ற பிரமை ஏற்பட்டது. உண்மையில் அது பிரமையா அல்லது உண்மையா என்பதே சந்தேகம்.

நம் சொந்தக் கிராமத்தில் தவழும் குழந்தை முதல், சாகப் போகும் கிழவன் வரை அனைவருமே நம்மை அறிந்திருப்பார்கள்; நம்மைப் புரிந்திருப்பார்கள். நம்மைப்பற்றிய சித்திரம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் பதிந்திருக்கும். அந்தச் சித்திரத்தின் குணகுணங்களை நாமும் கண்டறிந்து, அவற்றை ஒட்டி நம் நடைமுறையை வகுத்துக்கொண்டு வாழ்வது நியதி; அதுதான் நேர்மை; அதைத் தவிர்த்தால் வேறு வழியுமில்லை...

இங்கே, இந்த அந்நியப் பிரதேசத்தில் அந்தச் சித்திரம் எவர் உள்ளத்திலும் கிடையாது. நிர்வாணமாகத் தெருவில் நடந்து சென்ருலொழிய யார் எவர் என்று நம்மைக் கவனிக்கும் நபர் ஒருவரைக்கூட இங்கே காண முடியாது. இந்தக் கட்டற்ற சுதந்திரத்தில் கட்டுப்பாட்டை உடைக்கும் ஏதாவது ஒன்றைச் செய்து தீரவேண்டும் என்ற ஆசை எங்கள் உள்ளத்தில் மூண்டு விட்டதற்கு முதல் சான்று, திருவனந்தபுரம் ஹோட்டல் அறையில் வாழ்க்கையிலேயே முதல் முறையாகச் செல்லியா 'சிகரெட்' பிடித்தது.

இருட்டில் உட்கார்ந்து ஆளுக்கொரு சிகரெட்டை இழுத்துவிட்டுக் கட்டையை ஒரு மூலையில் எறிந்துவிட்டோம். ஏதோ அனுசாரமான காரியத்தைச் செய்வதாக மனச்சாட்சி மனதைக் கடித்தாலும், இருட்டு நேரமானதால அதனால் ஒன்றும் செய்ய இயலவில்லை. மனச்சாட்சி முகத்தில் எழுதும் வெட்கத்தையும் விகாரத்தையும் இருட்டு மறைத்துவிடும் என்ற துணிவில் சிகரெட் புகைத்ததைப்பற்றிய சிந்தனை இல்லாமல் படுத்தவர்கள் காலையில் எழுந்து கருகிப்போன சிகரெட் கட்டைகளைக் கண்டதும், ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொள்ளவே சங்கடப்பட்டோம்.

மறுநாள் காலை:

பத்மனுப ஸ்வாமி கோவிலுக்குப் போனோம். கோவிலுக்குப் போகும்போது பாதி வழியில் அருமையான மாம்பழங்களை ஒரு கூடையில் வைத்துக்கொண்டு வந்தாள் ஒரு பெண். அவள் உடம்பில் ஓர் அழுக்குப் பாடி; இடையில் ஒரு முண்டு.

பழங்களை விலை கேட்கும்போது பரஸ்பரம் ஒருவர் பாஷை ஒருவருக்குத் தெரியாத நிலையில் இரண்டு கட்சியிலும் பேச்சைவிட சிரிப்புக்குப் பிரதானம் கிடைக்கவே, எங்களுக்கிடையே ஏதோ ஓர் உறவும் வளர்ந்துகொண்டு வந்தது. சற்று அதிகப்படியாகவே விளையாடி நேரத்தைப் போக்கிவிட்டு ஓர் அரை டஜன் பழங்களை வாங்கிக்கொண்டு கோவிலைப் பார்த்து நடந்தோம். இந்த இரண்டு பிரம்மச்சாரிக் கட்டைகள் பட்டப் பகலில், ஊரம்பலத்தில் யாரோ ஒரு பெண்ணோடு நின்று சிரித்துப் பேசி நேரத்தைப் போக்கியதை நினைக்க நினைக்க

விசித்திரமாக இருந்தது. அதே ஜன நடமாட்டம் நிறைந்த தெருவில் மாம்பழத்தைக் கடித்துத் தின்றுகொண்டே நடந்தோம். 'தெருவில் வைத்துச் சாப்பிடுவதா?' என்ற என் சம்பிரதாயக் கேள்விக்கு, 'இங்கே நம்மை யாருக்குத் தெரியும்?' என்ற பதில்-கேள்வியைப் போட்டுத் தன்னையும் என்னையும் பரிபக்குவம் செய்துவிட்டான் செல்லையா.

'இங்கே நம்மை யாருக்குத் தெரியும்?'—இந்தக் கேள்வியும் இதனால் பிறந்த துணிவும் இல்லாவிட்டால் அன்று கோவிலுக்குப் போக நேர்ந்திருக்காது. அழகு என்று சொல்லப்படும் எல்லாமே வந்து கூடும் அந்த இடத்துக்குப் போனது, உண்மையில் பக்திப் பெருக்கினால் அல்ல; சுயம்வரத்துக்குச் செல்லும் ராஜகுமாரர்களின் கும்மாளத்துடன்தான் போனோம்.

அங்கும் சில வேடிக்கைகள்! விளையாட்டுகள்! பழக்காரி உபாக்யானத்தின் மூலப் பொருளை வேறுவிதமாக விளக்கும் வேறு சில கட்டங்கள்...

இப்படி மொத்தம் மூன்று நாட்கள் திருவனந்தபுரத்தில் தாமதம்.

வழக்கமாகச் சாப்பிடுவதைப்போல இரட்டிப்புச் சாப்பாடு. சிறு குழந்தைகளைப்போல் கண்ணில் பட்ட பண்டங்களையெல்லாம் வாங்குவது, தெருவழியாகத் தலைப்பாகை கட்டிக்கொண்டு நடப்பது, எங்காவது ஓரிடத்தில் உட்கார்ந்து அங்குள்ள பத்துப் பதினைந்து பேரைக் கண்டும் வெட்கப்படாமல் தெம்மாங்கு பாடுவது, எல்லாவற்றையும்விட மேலாகப் பழைய படியும் 'சிகரெட் வாங்குவோமா?' என்று ஏகதேசமாக நினைப்பது...

இந்த நிலையில் திருவனந்தபுரத்தை விட்டுப் புறப்பட்டு, நேராக நாகர்கோவிலுக்கு வந்து சேர்ந்தோம். வழக்கம்போல முதலில் அங்குள்ள லைப்ரரிக்குப் போனோம். அப்புறம் கோவிலுக்கு. இந்த இரண்டு காரியங்களும் ஆன பிறகு, நாங்கள் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்த இரண்டொரு சங்கீத வித்வான்களைக் கண்டு அவர்களுடன் பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பினோம். இரவில் ஹோட்டலின் மாடியில் அலுப்போடு வந்து படுத்தோம். படுத்ததும் செல்லையா அப்படியே

சிறிது நேரத்தில் உறங்கி விட்டான். மாலையில் நேரங் கழித்துச் சாப்பிட்ட 'ஸ்ட்ராங்' காபியின் போதை என்னைத் தூங்க விடவில்லை. ஏதாவது எழுதவேண்டும், அல்லது படிக்கவேண்டும் என்று நினைத்து இரண்டையுமே செய்து பார்த்தேன். இரண்டிலும் தோல்வியே ஏற்பட்டது. மனசுக்குள் ஒரே படபடப்பு. ஏதோ ராகத்தை முனகிக்கொண்டே இருந்தேன். சாரீரம் சுகமாக வளைந்து கொடுத்தது. ஆனால் இரவு பத்து மணிக்கு நாம் 'குரலெடுத்துப் பாடி'விட்டால் செல்லையா தூக்கம் கலைந்து எழுந்துவிடுவதோடு விவகாரம் நின்றுவிடாதே என்று பயந்து, மாடியை விட்டுக் கீழே இறங்கி வந்தேன். ஹோட்டல் ஒதுங்க வைக்கும் நேரம். பழையபடியும் காபியைச் சாப்பிட்டேன். வேறு எதையாவது செய்தாக வேண்டும் என்ற மனக் கிளர்ச்சிக்குக் காபியைக் காண்பித்தது மனம். தென்னை மரத்தில் தேள் கொட்டிப் பனைமரத்தில் நெறி கட்டிய கதையாக ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமல் எதைச் செய்தாலும் சுகமாகவும், அர்த்தபுஷ்டியாகவும் இருந்தது.

வெளியே வந்தேன். வெற்றிலை பாக்குக் கடையில் ஒரு சிகரெட்டை (சிகரெட்டேதான்!) வாங்கிப் பற்ற வைத்துக் கொண்டு மாடிக்கு வந்தேன். சிகரெட் தீ விரலைத் தீண்டும் வரை புகைத்துவிட்டு வந்து படுத்தேன். வாசலில் போடும் கோலத்தின் கோடு எங்கேயோ தொடங்கி, எங்கெங்கோ வட்டம் சுற்றி, கடைசியில் எங்கோ போய் முடிவதுபோலத்தான் மன ஓட்டம் இருந்தது. ஒரு சிந்தனைக்கும் அதை அடுத்துக் காரணமின்றிப் பிறக்கும் மற்றொரு சிந்தனைக்கும் உள்ள ஒற்றுமை, கருப்புக்கும் வெள்ளைக்கும் உள்ள ஒற்றுமைதான். அந்த ஒரு கோடி சிந்தனைகளில் முக்கியத்துவம் நிறைந்த சிந்தனைகள் இரண்டு:

ஒன்று: ஒரு தடவையாவது பிராந்தி குடித்துப் பார்ப்போமா?

இரண்டு: யாராவது ஒரு மலையாளப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டால் என்ன?

மறுநாளே கன்னியாகுமரிக்கு வந்துவிட்டோம். செல்லையாவும் நானும் இப்போது யார் யாராகவோ மாறிவிட்டோம்! ஒரே

ஊர் வாசிகளான எங்கள் இருவரிடையிலும் இருந்த மதில்கள் இப்போது அடியோடு சாய்ந்துவிட்டன. 'உலகொப்பன செய்' என்ற தருமம் போய், பரஸ்பரம் ஒருவருக்கொருவர் காட்டிக்கொள்ளும் மரியாதையும், அந்த மரியாதையின் உள் மூச்சு வெளிமூச்சாக இருக்கும் பயமும கண்ணியமான பேச்சும் எங்களோடு திருவனந்தபுரம் வரை வந்துவிட்டுப் பழையபடி யும் சொந்த ஊருக்கு விடைபெற்றுக்கொண்டதுமாதிரி இருந் தது.

மதுரையில் காலேஜில் கூடப் படித்த ஒருவன் தாசி வீட்டுக் குப் போனது, ஒழுக்கம் என்பது அர்த்தமில்லாத விஷயம் என்று யாரோ 'பகுத்தறிவோடு' சொன்னது, காலாகாலத்தில் கல்யாணம் செய்துகொள்ளுவதால் ஏற்படும் நன்மைகளைவிட அப்படிச் செய்யாததால் ஏற்பட்ட சங்கடங்கள்—இப்படிப் பல விஷயங்களை மூன்றும் மனிதன் தலையில் அநியாயமாகத் தூக்கி வைத்து நாங்கள் இருவரும் எங்கள் இருவர் சம்பந்தமாகவே பேசிக்கொண்டிருந்தோம். கடைசியில், கண்ணில் படும் யாரா வது ஒரு அழகி (அழகியாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை) அதிசயம் நிகழ்ந்ததுபோல, கடைக்கண்ணால் பார்த்துவிட் டால் அவளை ஜூலியட்டாகவோ, லைலாவாகவோ நினைத்து உயிரையும் உடலையும் அவளுக்கு அர்ப்பணம் செய்யும் மன நிலையை அடைந்த கட்டத்தில் செல்லையா வந்து நிற்கும் தருணம்...

அன்று தங்குவதற்கு ஒரு சத்திரத்தின் மேல்மாடி கிடைத் தது. பெரிய அறை. ஏதோ திருவிழாக் காலங்களில் கன்னியா குமரிக்கு வருகிறவர்கள் வந்து தங்கக்கூடிய அறை அது. வரு ஷத்தில், விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில நாட்களுக்குத் தான் அந்த அறையில் மனித வாசம்.

நாளுக்கு ஒரு ரூபாய் என்று வாடகை பேசி அறையில் சாமான்களைக் கொண்டுபோய்ப் போட்டோம்.

விசாலமான அறைதான். மேல்பக்கமாக இருந்த இரண்டு ஜன்னல்களில் கம்பிகள் இல்லாவிட்டால் ஜன்னல்கள் வழி யாகக் குதிரையும் நுழையும்; யானையும் நுழையும்! அவ்வளவு பெரிய ஜன்னல்கள். வடக்குச் சுவரில் இருந்த மாடக்குழியில்

அகல்விளக்கு வைக்கப்பட்டிருந்தது. உள்ளே ஒரே ஒரு கட்டில் தான் கிடந்தது; அதாவது தெற்கத்திச் சீமையில் ஏராளமாகக் காணப்படும் பனை நார்க் கட்டில் நபர்களின் எண்ணிக்கை இரண்டாக இருந்ததால், கட்டிலோடு ஒரு கோரைப் பாயை யும், இரண்டு தலையணைகளையும் கொண்டுவந்து போட்டான் வாடகைக்கு விட்டவன். அகல்விளக்கில் கொஞ்சம் எண்ணெ யும் விட்டு, பக்கத்தில் எண்ணெயுடன் ஒரு டம்ளரையும் வைத்துவிட்டுப் போனான். இப்படியாக அறையை வசதி செய்துகொண்டு, கடற்கரைக்குப் புறப்பட்டோம். கோவிலில் வேலைசெய்யும் ஒரு பிராமணப் பையன் வந்து கன்னியாகுமரித் தலத்தின் மகத்துவங்கள், குமரியம்மன் தவம் செய்த இடம், தீர்த்த விசேடங்கள் முதலியவற்றை விளக்கிச் சொல்லிக் கொண்டே வந்து முக்கியமான இடங்களையெல்லாம் அழைத் துக்கொண்டுபோய்க் காட்டினான்.

திருவனந்தபுரம் பத்மநாப ஸ்வாமியைத் தரிசனம் செய் யப்போன மாதிரியில் குமரியம்மனையும் தரிசனம் செய்துவிட்டு, சாப்பாட்டையும் முடித்துக்கொண்டு அறைக்குத் திரும்பி னோம்.

திரும்பும்போது இருவரும் ஏகமனதாகவே சிகரெட், வெற் றிலை பாக்கு முதலிய சரக்குகளை வாங்கிக்கொண்டோம். அறைக்கு வந்தோம். அறையின் கதவைத் திறந்ததும், வேலைக்காரன் வந்து விளக்கேற்றிவிட்டு, ''சாப்பாடு எடுத்துக் கொண்டு வரலாமா?'' என்று கேட்டான். அதற்கு அவசிய மில்லாத விபரத்தைச் சொன்னதும் போய்விட்டான். அப் புறம் கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு விளக்கை அணைத்து இருவரும் கட்டிலிலும் பாயிலுமாகப் படுத்துக் கொண்டோம்.

கட்டிலில் படுத்திருந்த செல்லையா வாடைக் காற்று அடிக் கிறதென்று ஜன்னல்களைச் சாத்திவிட்டான். ஆகவே, சிறிது நேரத்தில் அறைக்கென்று பிரத்தியேகமாக உள்ள விளக் கெண்ணெய் விளக்கின் வாசம் மண்டிவிட்டது. இதைப்பற்றி நான் யோசனை செய்துகொண்டிருந்தபோது என்னைப் பெயர் சொல்லி அழைத்தான் செல்லையா.

''என்ன சமாச்சாரம்?''

''இந்தக் கட்டிலில் பவுடர் வாசம் அடிக்கிறது!''

''பவுடர் வாசமா?''

''ஆமாம், வந்து பாரேன்.''

இருவருமே சிறுபிள்ளைகளாகி விட்டோம்!

எழுந்து கட்டிலின் பக்கமாகப் போனேன். செல்லையா என் தலையைக் கொண்டுபோய்க் கட்டிலின் தலைமாட்டின் பக்கமாக ஒட்டவைத்தான். முகர்ந்து பார்த்தேன். பவுடர் வாசம்தான்!

கொஞ்சநேரம் கழித்துப் பழையபடியும் நான் பாயில் வந்து படுத்தேன்.

'எந்தப் பெண் வந்து படுத்துறங்கிய கட்டிலோ?'—இந்த உபோத்காதத்துடன் தொடங்கிவிட்டது ஒரு ரசமான இதிகாசம்!

ஸ்தல யாத்திரை வந்த ஒரு குடும்பத்தைச் சேர்ந்த யாரோ ஒரு இளம் பெண நிலவு மயக்கத்தில் யோக நித்திரை செய்யும் சௌந்தர்யக் காட்சியை உள்ளம் எழுதிப் பார்த்தது. கீழை நாட்டுப் பெண்கள் கண் வளரும் பேரழகை வியந்து எழுதிய அனதோல் பிரான்ஸின் வாசகத்தை இருவரும் பிரஸ்தாபித்துக்கொண்டோம். அந்தப் பெண்...

அவளுடைய அழகு, அவளுடைய காதல், அவளுடைய இதயத் தேட்டங்கள், அவள் பாடும் பாட்டு, அவள் ஏதோ ஓர் அழகான அந்திமாலையில் யாருடைய குதூகலத்துக்காகவோ கண்ணாடி முன் நின்று பவுடர் பூசிக் கோலம் புனைந்தபோது அலங்காரத்தில் திருப்தியும் அதிருப்தியும் ஒருங்கே படர்ந்துகொண்டிருந்த அவள் காதல் உள்ளம்...

இப்படியே விரிந்துகொண்டு போன என் கற்பனைக் கதையை எந்த இடத்திலோ உறக்கம் முடித்துவிட்டது.

பகலெல்லாம் சுற்றியலைந்ததால் உடம்பில் ஒரே அலுப்பு. ஆகவே அயர்ந்து உறங்கி விட்டேன். உறங்கி எவ்வளவு நேரமாகியிருக்கும் என்று எனக்குத் தெரியாது. திடீரென்று செல்லையா என்னைத் தட்டி எழுப்பினான். எனக்கு விஷயம் புரியவில்லை.

"ஏன், என்ன சமாச்சாரம்?"—இது நான்.

"கொஞ்சம் எழுந்திரு. சீக்கிரம்..."

"என்ன விஷயம்?"

என்னவோ ஏதோ என்று தூக்கம் கலைந்து எழுந்தேன்.

"கட்டிலில் ஒரே மூட்டைப்பூச்சியாக இருக்கிறது. தூங்கவே முடியவில்லை" என்றான் செல்லையா.

"மூட்டையா?..."

செல்லையா அகல் விளக்கை ஏற்றினான். மூட்டைப்பூச்சி என்றதும் எனக்கு உடம்பெல்லாமே அரிப்பு எடுத்துவிட்டது. அந்தக் கட்டிலை நடு வீட்டில் போட்டுக்கொண்டு உறங்குவது எப்படி? மூட்டை கடிக்காமல் இருந்தாலும் மேற்கொண்டு தூக்கம் பிடிக்குமா? இருவரும் கட்டிலை எடுத்துக்கொண்டு வந்து வெளியே வராந்தாவில் போட்டுவிட்டோம். செல்லையா ஊரிலிருந்து கொண்டு வந்திருந்த படுக்கையை வெறுந்தரையில் விரித்துப் படுத்துக்கொண்டான். எனக்கு அந்த மூட்டைப் பூச்சியின் ஞாபகம் அகலவே இல்லை. நான் படுத்திருக்கும் பாயிடமே சந்தேகம் வலுத்துவிட்டது.

"சப்பாத்திக்கள்ளி மாதிரி வந்து அப்பி விட்டது மூட்டை" என்று சொன்னான் செல்லையா. கட்டிலைப்பற்றிய நினைவில் அருவருப்புக்கு மேல் அருவருப்பைக் கொண்டுவந்து குவித்தன செல்லையாவின் சொற்கள்.

"சிறிது நேரத்திற்குமுன் ரம்பையாக இருந்த கட்டிலா இது!" என்றேன்.

செல்லையா சிரித்தான்.

எங்களுடைய பைத்தியக்காரக் கனவின் கன்னத்தில் அறை விட்டது இந்த மூட்டைப்பூச்சி யனுபவம். அந்தக் கற்பனை மங்கையின் அழகான தோற்றத்துக்கும், அழகான அலங்காரத்துக்கும் மறைவில் ஒரே ஈரும் பேனும் பற்றிப் புழுக்கள் நெளிவது போல இருந்தது, கட்டிலில் மூட்டைப்பூச்சி பற்றி இருந்தது. சுற்றுப் பிரயாணத்தின் அலையில் மிதந்து நீச்சடித்துக்கொண்டிருந்த எங்கள் போதையை மட்டுப்படுத்திவிட்டது இந்தப் பிரத்தியக்ஷ அனுபவம்.

காலையில் சீக்கிரமாகவே எழுந்துவிட்டோம். கடற்கரைக்குப் போய் சூரியோதயம் பார்க்கவேண்டும். இது கன்னியாகுமரி வாசிகளின் காலைச் சடங்கு. படுக்கைவிட்டு எழுந்து வெளியே வரும்போது அந்தக் கட்டில் கண்ணில் பட்டது. மனதுக்குள்ளேயே சிரிப்பு வந்தது.

கடற்கரையில் சூரியோதயம் பார்த்துவிட்டு, அங்கேயே ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பினோம். திரும்பும்போது கோவிலுக்கு முன்புறமாக உள்ள ஒரு ஹோட்டலுக்குள்ளே நுழைந்தோம். ஹோட்டலின் உள்ளே கூட்டமாக இருந்ததால், வெளியில் உள்ள தாழ்வாரத்தில் உட்கார்ந்தே பலகாரத்தைச் சாப்பிட்டோம்.

சாப்பிட்டு முடிந்தது.

இனி?...

வழக்கம் போல, அதாவது புது வழக்கம் போல, சிகரெட் வாங்கவேண்டும். நான் 'எனக்கு வேண்டவே வேண்டாம்' என்று மறுத்துவிட்டேன். செல்லையா மட்டும் பக்கத்துக் கடைக்குப் போய் ஒரு சிகரெட் பெட்டியையும் நெருப்புப் பெட்டியையும் வாங்கிக்கொண்டு வந்து ஹோட்டல் தாழ்வாரத்தில் உட்கார்ந்தான். செல்லையா சிகரெட் குடித்துக்கொண்டிருக்கும்போது...

ஹோட்டலின் உள் அறையிலிருந்து திடீரென்று ஒருவர் வந்து எங்கள் கண்முன் பிரத்தியக்ஷமானார். செல்லையா துள்ளி விழுந்தான். 'பளிச்'சென்று சிகரெட் துண்டைத் தூர எறிந்து விட்டு சிகரெட் பெட்டியைப் பத்திரப்படுத்தப் போனான். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியுமா? இனி மறைத்துத்தான் என்ன பயன்? யாருக்கும் தெரியக்கூடாது என்று மறைக்கப் பார்க்கிறோமோ, அவருக்கு உண்மை தெரிந்துவிட்டது; மறைக்க முயன்றதும், சிகரெட் பெட்டியைப் பெயரளவுக்குச் சட்டைப் பையில் எடுத்துப் போட்டுக் கொண்டதும் அவருக்குத் தெரிந்துவிட்டன.

வந்தவர் எங்கள் ஊர் கிராம முனிசீப்.

"என்ன...?" என்று கேட்டார், சிவபூஜையில் நுழைந்த அந்த மனிதர்.

''எப்போது வந்தீர்கள்?'' என்றும் அவர் கேட்டார்.

செல்லேயா என்னை முந்திக்கொண்டு, ''வந்து ஒரு வார மாகிறது'' என்று படபடப்பாகச் சொன்னன். முந்திக் கொண்டு வந்தவரிடம் பேசினல், நல்ல பிள்ளேயாகி விட முடியுமா?

''ஊருக்கு எப்போ?'' என்று கேட்டுவிட்டு எங்கள் பக்கத் தில் கிராம முனிசீப் உட்கார்ந்தார்.

''சாயங்காலம் புறப்பட வேண்டும், நீங்கள்...?'' அவர் தாம் எப்போது ஊருக்குப் போகிருர் என்ற விபரத்தைச் சொன் ஞர். அந்த விபரம் இங்கே எதற்கு?

கிராம முனிசீப் வந்தது எங்கள் ஊரே வந்தது போலிருந் தது.

அவரிடம் விடை பெற்றுக்கொண்டு நாங்கள் எங்கள் அறைக்குப் புறப்பட்டு வரும்போது, கன்னியாகுமரியில் ஒரு தெருவின் வழியாக நடந்து வருவதற்கும் சொந்த ஊரில் ஒரு தெருவின் வழியாக நடந்து வருவதற்கும் வித்தியாசமே தெரிய வில்லே. எங்கள் பிரயாண போதை அலுத்துச் சலித்து விழுந்து விட்டது. இந்தச் சங்கடமான நிலேமைக்கு நெகிழ்ச்சி கொடுக்கவேண்டும் என்று ஏதோ பாட்டைச் சீட்டியடிக்க ஆரம்பித்தேன்.

''உஸ்! தெருவழியே என்ன சீட்டியடிக்கிறது?'' என்று தடுத்தான் செல்லேயா!

பிரயாண போதை செத்தே போய்விட்டது என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்? காடாறு மாதம் முடிந்தது.

நாங்கள் பழையபடியும் சொந்த ஊர் வாசிகள் ஆகி விட்டோம்!

# மூல காரணம்

குளத்தூர் அருணசலம் செட்டியார் காலமானபோது, தினசரிப் பத்திரிகையிலே வெளிவரும் மரணச் செய்தி மாதிரி, தமக்குப் பின்னல் ஒரு விதவை, அதாவது அவர் மனைவி, இரண்டு பெண்கள், வருத்தத்தில் ஆழ்ந்த கணக்கற்ற பந்துக் கள், நண்பர்கள் முதலியோரை விட்டுவிட்டுப் போய்விட்டார். ஆனல், தமக்குப் பின்னல் வரும் சந்ததிகள் அடுத்தவனிடம் போய்க் கைகட்டிப் பிழைக்க வேண்டிய நிலை ஏற்படக் கூடா தென்று குளத்தூரிலும், பக்கத்திலுள்ள மார்த்தாண்டம் பட் டியிலும் கொஞ்சம் நிலபுலன்களையும், இரண்டு வீடுகளையும் சுய சம்பாத்தியமாகவே சம்பாதித்து வைத்திருந்தார். அவருக் குப் பக்கபலமாக இருந்தது அவருடைய மனைவி மீனுக்ஷி யம்மாள்தான். அந்த அம்மாளால்தான் குடும்பம் இவ்வளவு முன்னுக்கு வந்தது என்று சொல்லிக்கொள்வார்கள். குடும்பத் தின் சகல பொறுப்புக்களையும் சுயதாட்டியமாக நிர்வகித்து நடத்துவதில் மீனுக்ஷியம்மாளைப்போல் வேறு யாரையும் பார்க்க முடியாது.

பெண்கள் இரண்டு பேரில் மூத்தவளுக்குத்தான் கல்யாண மாகியிருந்தது. மருமகன், ஆண் வாரிசு இல்லாத சொத்துக்கு உரியவனக மீனுக்ஷியம்மாள் வீட்டிலேயே வந்து காலக்ஷேபம் செய்துகொண்டு, ஊராரிடம், தன் விவசாயத் திறமையில்லா விட்டால், அருணசலம் செட்டியாரோடேயே அவருடைய சொத்துக்களும் போயிருக்கும் என்று சொல்லிக்கொண்டு வந் தான். இரண்டாவது பெண்ணுக்கு வயது இருபதை அடுத் திருக்கும். இன்னும் கல்யாணமாகவில்லை. கிராமங்களிலே பெண்களுக்கு மெதுவாகத்தான் கல்யாணம் நடக்கும். ஆனு லும், செட்டியார் 'சென்று போன' பிற்பாடு வயசுப் பெண்ணை வீட்டில் வைத்திருப்பது சரியல்ல என்று அவர் இறந்த மறு வருஷத்திலேயே கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய ஆரம்பித் தாள் மீனுக்ஷியம்மாள். உள்ளூர் பலகாரக் கடைச் செட்டியார்

மகன் முருகையாவுக்குப் பெண் நிச்சயம் செய்யப்பட்டுக் கல்யாணமும் நடந்தேறியது. எல்லோரும் எதிர்பார்க்கிறபடியே முருகையாவும் மாமியார் வீட்டிலேயே வந்து வசிக்கத் தொடங்கினன். இரண்டு மருமகன்மார்களும் சேர்ந்து விவசாயத்தை மிகவும் 'கருக்கடை'யாக நடத்த ஆரம்பித்ததைக் கண்ட மீனுக்ஷியம்மாளுக்கு உள்ளுக்குள்ளே மட்டற்ற பெரு மகிழ்ச்சி.

ஆனல், இப்படி இரண்டு குடும்பங்களும் ஒரே வீட்டில் எவ்வளவு காலத்துக்கு இருக்கச் சாத்தியப்படும்? ஆகவே அதே வீட்டில் பின்புறமாக இடித்து ஒரு வாசல் கட்டப்பட்டு, வீட்டின் நடுவே ஒரு சுவரும் எழுப்பப்பட்டது. ஊரில் நாலு பெரிய மனிதர்களைக் கூட்டி வந்து குளத்தூரிலிருந்த சொத்துக்களைப் பாகப் பிரிவினை செய்ய ஆரம்பித்தாள் மீனுக்ஷியம்மாள். இரண்டு மருமகன்களுக்கும் சமபாகமாகப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, மார்த்தாண்டம்பட்டியிலுள்ள பத்து ஏக்கர் நிலத்தையும், கூரை வீட்டையும் தனக்கு ஜீவனும்சமாக வைத்துக்கொண்டு தன் ஆயுள்கால பரியந்தம் அனுபவித்துக் கொள்வது என்றும் தனக்குப் பிற்காலத்தில் அவற்றைத் தன் இரு பெண்களும் பங்கிட்டு அனுபவித்துக்கொள்வதென்றும் தான் உத்தேசித்திருப்பதாக மீனுக்ஷியம்மாள் கிராம முனிசீப் பிள்ளையிடத்திலும் அங்கு கூடியிருந்தவர்களிடத்திலும் தெரிவித்தாள். அப்படியே ஏற்பாடானது. இரண்டு பெண்களுக்கும் ஒவ்வொருவருக்கும் பதினலு ஏக்கர் கரிசல் நிலம்; மிளகாய்த் தோட்டத்தில் சமபாதி பங்கு; கிணற்றுத் தண்ணீர், வாய்க்கால் பாத்தியம் முதலியவற்றிலும் சம உரிமை. வீட்டிலுள்ள ஜங்கம சொத்துக்களையும் பங்கு போட்டார்கள். அவற்றில் மாவரைக்கும் உரல், அம்மி, அரிசி குத்தும் உரல் இவை மூன்றும் பொது; இரண்டு குடும்பங்களுமே அனுபவித்துக் கொள்ள வேண்டியது.

வீட்டின் இரண்டு பாகங்களிலும் ஒவ்வொரு குடும்பத்தையும் எந்தெந்தப் பக்கத்தில் குடிவைப்பது என்று தெய்வ சம்மதமாகத் தீர்மானிக்கவேண்டி இரண்டு திருவுளச் சீட்டுகள் எழுதிக் குலுக்கிப் போட்டுப் பார்த்ததில், மூத்த மகள் ராமலக்ஷ்மிக்

குத் தென் பக்கமாகவும், இளைய மகள் வள்ளியம்மைக்கு வட பக்கமாகவும் உத்தரவாயிற்று. மீனுக்ஷியம்மாள் வந்தவர்களுக்கு வெற்றிலை பாக்குக் கொண்டுவந்து வைத்தாள். அப்போது கிராம முனிசீப் பிள்ளை எல்லோரையுமே பொதுவாகப் பார்த்துக்கொண்டு, "என்னமோ, அருணசலம் செட்டியார் இல்லாததுக்கு, யாதொரு குற்றம் குறையோ, சண்டை சச்சரவோ இல்லாதபடி எல்லோருக்கும் மனச் சம்மதமாக நடக்க வேண்டிய காரியங்களை மீனுக்ஷி ஒழுங்கு பண்ணிட்டா. போகட்டும்; கடவுள் செயலாக இரண்டு குடும்பங்களும் ஒற்றுமையாக இருப்பதைப் பார்த்து மீனுக்ஷி சந்தோஷமாகக் கண்ணை மூடணும்" என்று வெற்றிலையில் சுண்ணும்பு தடவிக்கொண்டே சொன்னுர்.

"என்னை அதுக்குள்ளே சாகச் சொல்றீகளா கிராமனசு ஐயா?" என்று சொல்லிச் சிரித்தாள் மீனுக்ஷியம்மாள். எல்லோரும் சிரித்தார்கள்.

அதற்கு அப்புறம் சுமார் பத்து நாட்கள் குளத்தூரிலே இருந்தாள் மீனுக்ஷியம்மாள். தன் இரண்டு பெண்களுடைய வீட்டிலும் மாறி மாறித் தடபுடலாக விருந்துகள். அவளுக்குச் சந்தோஷமானுல் பொறுக்க முடியவில்லை. ஒரு நல்ல நாள் பார்த்து மார்த்தாண்டம்பட்டிக்குப் புறப்பட்டாள். இரண்டு பெண்களும் பிரியா மனதுடன் அழுதுகொண்டே ஊர் மந்தையிலுள்ள பிள்ளையார் கோவில் வரைக்கும் வந்து தாயாரை வழியனுப்பினுர்கள். அவர்கள் வீட்டில் வேலை செய்த பண்ணைக்காரன் வண்டியோட்டிக்கொண்டு போனுன்.

அக்காளும் தங்கையும் என்ருல், ராமலக்ஷ்மியும் வள்ளியம்மையும்தான். அவர்களுடைய கணவன்மார்களோ, உடன் பிறந்த சகோதரர்களெல்லாம் தோற்றுப்போகும்படியாக அவ்வளவு அன்யோன்யமாக இருந்தார்கள்.

வள்ளியம்மை கல்யாணத்துக்கப்புறம் அதுதான் முதல் புரட்டாசி. அந்த வருஷத்து மொத்த மகசூலை இரண்டு பேருமே எடுத்து அனுபவித்துக்கொள்ள வேண்டியது. மறு வருஷம்தான் தனித்தனி விவசாயம் தொடங்கவேண்டும். அது

வள்ளியம்மை கல்யாணத்துக்கு முன்பே பயிர்செய்யப்பட்ட மகசூல் ஆனதால் அந்தவிதமான ஏற்பாடு.

அறுவடையான சோளக் கதிர்கள் களத்தில் கிடந்தன. ராத்திரியில் இரண்டு மூன்று ஜோடி மாடுகளைக்கொண்டு பிணையல் அடிக்கவேண்டும். அதற்காக வேண்டி ஒரு தூக்கம் தூங்கி எழுந்து பதினொரு மணிக்கெல்லாம் களத்துக்குப் புறப் பட்டான் முருகையா. அப்போது அவனுடைய ஷட்டகன் கைலாசமும் கூடப் புறப்பட்டான். உடனே முருகையா அவ னைப் பார்த்து மிகவும் உரிமையோடு, "எதுக்கு அண்ணேச்சி, நான் ஒருத்தன் போதாதா? நீங்க படுத்துக்கோங்க. நான் போயிட்டு வர்ரேன். இதுக்குத் தூக்கத்திலே எந்திருச்சி ஏன் வரணும்?" என்று சொன்னான்.

கைலாசமோ, "வேண்டாம் முருகையா, நீ எந்தக் காலத் திலே களத்து வேலை செய்து பழக்கம்? நீ இரு, நான் போகி றேன்" என்று மறுத்துச் சொன்னான். ஆனால் முருகையா விட்டுக் கொடுக்கவில்லை. "நான்தான் போவேன்" என்று பிடிவாதம் பிடித்தான். கைலாசத்துக்கு மனம் பூரித்துவிட் டது. உடனே, தூங்குகின்ற தன் மனைவியை எழுப்பி, "ஏய் இந்தா, சித்தே எந்திருச்சி கொஞ்சம் தேயிலைத் தண்ணி போடு. முருகையா களத்துக்குப் போகுது" என்று சொல்லி விட்டு, வாசல் திண்ணைக்கு வந்து முருகையாவை உட்காரச் சொன்னான். ஆனால் கைலாசம் சொன்னது பக்கத்து வீட் டில், அதாவது நடுச் சுவருக்கு மறுபுறம் இருந்த வள்ளியம்மை யின் காதில் விழவே, அவள் எழுந்து வந்து, "நீங்க இரண்டு பேருமே வாங்க. நான் எப்பவோ காப்பி போட்டு வச்சிட் டேன்" என்று இரண்டு பேரையும் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். முருகையா தேயிலைக் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு களத்துக்குப் போய் இரவோடிரவாகப் பிணையலடித்துச் சோளத்தைப் பந்தோபஸ்தாக வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்த்தான். முருகையா வீட்டு முற்றத்தில் சோளத்தைக் கொட்டி இரண்டு பாகமாக அளந்து எடுத்துக்கொண்டார்கள். கடைசியில் அளக்க முடியாதவாறு தரையில் பரவலாகச் சிந் திக் கிடந்த சோளம் சுமார் நாலு பக்கா இருக்கும். அதை

வள்ளியம்மை பெருக்கி ஒரு குவியலாகக் குவித்தாள். முருகையா இரண்டு பாகமாக அதை அளக்க ஆரம்பித்தான். அப்போது, ''சரி சரி, அளந்தது போதும்; வள்ளியம்மா, இதை அள்ளி வீட்டிலே கொண்டுபோய்ப் போடு'' என்று சொல்லி விட்டுத் தன் பங்கு அளந்து போடப்பட்ட கோணிப் பையை எடுத்துக்கொண்டு அந்த நாலு பக்காச் சோளத்தையும் பொருட்படுத்தாமல் போய்விட்டான் கைலாசம்.

இவ்வளவு தூரம் கொஞ்சம்கூட வேற்றுமை பாராட்டாமல் குடும்பங்கள் பழகி வந்தன.

அடுத்த மாதம் தீபாவளி வந்தது மார்த்தாண்டம்பட்டியிலிருந்து மீனுக்ஷியம்மாள் வந்தாள். இங்கே அதற்குள்ளாகத் தன் அக்காளுடைய மூன்று வயதுப் பையனுக்கு, தான் பைசா பைசாவாகச் சேர்த்து வைத்த காசைக்கொண்டு ஒரு நீலப் பனியன் வாங்கி வைத்திருந்தாள் வள்ளியம்மை. முருகையா கடைக்குப் போய் கைலாசத்துக்கும் அவன் மனைவிக்கும் மகனுக்கும் ஜவுளி எடுத்துக்கொண்டு வந்தான். மீனுக்ஷியம்மாள் கண்குளிரத் தீபாவளிப் பண்டிகை நடந்தது. தன் அக்காளின் பிள்ளையை வள்ளியம்மை அன்று கீழேயே விடாமல் இடுப்பில் வைத்துக்கொண்டே எல்லா வேலைகளையும் செய்து வந்தாள்.

## 2

அடுத்த வருஷம் தைப்பொங்கல். இந்த ஒன்றரை வருஷத்திற்குள்ளாக இரண்டு குடும்பங்களிலும் சில மாறுதல்கள். பக்கம் பக்கமாகக் குடித்தனம். எப்பேர்ப்பட்ட பொறுமைசாலிகள் நிறைந்த குடும்பங்களாயிருந்தாலும் ஒரு வருஷத்துக்குமேல் பக்கம் பக்கமாகக் குடித்தனம் செய்துவந்தால் ஒருவருக்கொருவர் ஏதாவது ஒரு காரணத்தினுல் கொஞ்சம் மனப் புழுக்கம் உண்டாகாமல் இருக்காது. ஆகவே இப்போதெல்லாம் கைலாசமும் முருகையாவும் ஒருவரையொருவர் இருட்டில் அடையாளம் தெரியாமல் சந்தித்துக்கொண்டால் ஒருவர் 'யார்?' என்று கேட்க, இன்னொருவர் 'என்ன?' என்று பதில்

குரல் கொடுத்துக் கொள்ளுவதைத் தவிர, வேறு அவ்வள வாகப் பேச்சு வார்த்தை கிடையாது. பெண்களைப்பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ஒருவருக்கொருவர் பேசிக்கொள் வதை அறவே நிறுத்தி விட்டனர்.

வள்ளியம்மைக்கு ஒரு பெண்குழந்தை; இப்பொழுது அதற்கு ஐந்து மாதம் ஆகியிருந்தது. அது வடக்கு வீட்டில் அழுதால் தெற்கு வீட்டிலிருக்கும் ராமலக்ஷ்மிக்கு இடி விழுந்த மாதிரி இருக்கும். உடனே ஏதாவது சொல்லிப் புலம்ப ஆரம் பித்து விடுவாள். ஆகாயத்தைப் பார்த்துப் பேர் ஊர் குறிப் பிடாமல் என்னென்னவோ சொல்லிக்கொண்டு நாளெல்லாம் முணுமுணுத்த வண்ணம் இருப்பாள். வள்ளியம்மையும் இலே சிலே விட்டுக் கொடுப்பவளல்ல. ராமலக்ஷ்மியின் மகன் விளை யாடுவதற்காகக் கல்லையோ மண்ணையோ கொண்டுவந்து அவள் வீட்டுக்கு முன்னால் போட்டிருந்தால், பக்கத்து வீட்டுப் பெண்களைக் கூட்டிக்கொண்டு வந்து, "பாருங்கம்மா, இந்த அநியாயத்தை! ஒரு நாளைக்குப் பத்துத் தடவை முத்தத்தைப் பெருக்கினாலும் இந்தக் குப்பைதான். நான், அழுகிற குழந் தையை வச்சிக்கிட்டிருப்பேனா, இங்கே வந்து அவர்களுக்குப் பெருக்கிக்கொண்டிருப்பேனா?" என்று பற்களைக் கடித்துக் கொண்டு கோபம் கொதிக்கச் சொல்லுவாள் வள்ளியம்மை. ஆனால் இதுவரை இருவரும் நேரடியாக நின்று சண்டை போட்டுக்கொள்ளவில்லை. எந்த நேரமோ என்று காத்துக் கொண்டிருந்தது யுத்தப் பிரகடனம். பூர்வாங்க ஏற்பாடுக ளாகத் தத்தம் கக்ஷியைப் பலப்படுத்தும் முறையில் பக்கத்து வீட்டார்களை இருவரும் சாட்சியம் பிடித்து வைத்திருந் தார்கள்.

இந்த நிலையில் தைப் பொங்கலுக்காக ஆடி அசைந்து கொண்டு வந்து சேர்ந்தாள் அறுபது வயதுக் கிழவி மீனாக்ஷி யம்மாள். அவளுக்கு இப்படி நல்ல நாட்களில் தன் மக்க ளோடு இருந்து சாப்பிட வேண்டும் என்று ஒரு ஆற்றாமை! தீபாவளிக்கு அப்புறம் இப்போதுதான் வந்திருக்கிறாள்.

வந்து ஒருநாள் இருந்து பார்த்தாள். இரண்டு விடுகளும் "பெண்குழந்தை பிறந்த வீடுமாதிரி" என்று சொல்லுவார்

களே அப்படி 'கப்சிப்'பென்று அமைதியாக இருந்தன. மீனாக்ஷியம்மாளுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

நம்முடைய கதை நடக்கும் இந்த நேரத்தில் மீனாக்ஷியம்மாள் தன் மூத்த மகள் ஸ்ரீமதி ராமலக்ஷ்மியம்மாள் வீட்டில் எழுந்தருளியிருக்கிறாள். இரவு மணி எட்டு இருக்கும். வடக்கு வீட்டில் அதாவது வள்ளியம்மை வீட்டில், வழக்கம்போல் குழந்தை அழுதது. தங்கள் மனஸ்தாபத்தைத் தம் தாயாருக்கு இன்னும் தெரிவிக்கவில்லையே என்று கவலைப்பட்டுக்கொண்டிருந்த வள்ளியம்மைக்குக் காரணமில்லாமல் யார்மேலோ கோபம் வந்ததுபோலிருந்தது. உடனே தேற்றத் தேற்ற அழுதுகொண்டிருந்த தன் குழந்தையின் முதுகில் 'பளீர் பளீர்' என்று இரண்டு அறை வைத்தாள். இது பக்கத்து வீட்டில் இருந்த மீனாக்ஷியம்மாள் காதில் விழுந்ததும், அவள் திடுக்கிட்டு, "குழந்தையைப் போட்டு அப்படி ஏண்டி அடிக்கிறே? உனக்கு என்ன, புத்தி கெட்டுப்போச்சா வள்ளியம்மா?" என்று அந்த இடைச் சுவரைப் பார்த்துக்கொண்டே கேட்டாள். குழந்தை மேலும் அதிகமாக உரத்து அழுதது. உடனே ராமலக்ஷ்மியைப் பார்த்து, "நீயாவது போய்க் குழந்தையைத் தூக்கிக்கிட்டு வாயேன். பேசாமல் கேட்டுக்கிட்டிருக்கையே?" என்று அங்கலாய்த்துக்கொண்டு மீனாக்ஷியம்மாள் சொன்னது தான் தாமதம், எதிரொலி கிளம்பிய மாதிரி வடக்கு வீட்டிலிருந்துகொண்டே, "உயிரோட இருக்கிற குழந்தையைக் கரிக்காமல் இருந்தால் போதாதா? குழந்தையைத் தூக்கணுமாக்கும்?" என்று சொன்னாள் வள்ளியம்மை. உடனே தெற்கு வீட்டிலிருந்து ராமலக்ஷ்மி, "யாரடி உன் குழந்தையைக் கரிக்கிறா? மரியாதைக்குப் பேசாமல் இருந்தா மேலே மேலே குதிரை ஏறப் பார்க்கிறயே? இல்லே, கேட்டேன்" என்று சவாலை ஏற்றுக்கொண்டாள். நடுநிலைமை வகித்து மத்தியஸ்தம் செய்யப் புறப்பட்ட மீனாக்ஷியம்மாள் இருமிக்கொண்டே என்னென்னவோ சொன்னது அந்தக் கூச்சலில் அவளுக்கே கேட்கவில்லை. அப்புறம் பெண்கள் எங்கே கேட்டிருக்கப் போகிறார்கள்? ஒரே அடைமழை பிடித்துவிட்டது! இரண்டு வீட்டிலும் ஆண்பிள்ளைகள் இல்லை; தோட்டக் காவலுக்குப்

போயிருந்தார்கள். அங்கே எப்படியென்றால், ஒருவன் தோட்டத்தில் மற்றொருவன் இறங்கி ஏதாவது காய்கறியைப் பறித்துக்கொள்ளக்கூடும் என்று இரண்டு பேருக்கும் சந்தேகம்!

இரண்டு பெண்களும் தத்தம் வீட்டை விட்டுத் தெருவுக்கு வந்துவிட்டார்கள். பொதுவாகச் சண்டையென்றால் வீட்டுக்குள் வைத்துப் போடுவது அவ்வளவு சிலாக்கியமில்லை; நாலு பேருக்கும் நடுவில் தெருவில் வந்து நின்று சண்டை போடுவதில்தான் பெருமை; பெண்களுக்குத் தனிப் பெருமை. அந்த நிலா வெளிச்சத்தில் இருவரும் சண்டை போட ஆரம்பித்தார்கள். பக்கத்து வீட்டுக்காரர்கள் வந்து விலக்கியும் முடியவில்லை. இரவு மணி பத்தாகிவிட்டது.

சண்டையை விலக்கிச் சமாதானம் செய்ய வந்தவர்கள் தத்தம் வீடுகளுக்குப் போய்க் கதவைப் பூட்டிக்கொண்டு படுத்துக்கொண்டார்கள். மீனாக்ஷிக் கிழவியும் தன்னால் ஒன்றும் நடக்காது என்று வீட்டுக்குள் வந்துவிட்டாள். கடைசியில் சண்டை நடப்பதைப் பார்ப்பதற்கு ஆட்கள் இல்லாததாலோ, அல்லது தெருவிலே நாய்கள் வந்து இக் கூச்சலைக் கண்டு குரைக்கத் தொடங்கியதாலோ பெண்கள் இருவரும் பேசாமல் வீடு வந்து சேர்ந்தார்கள்.

சண்டையை ஒருவாறாக முடித்துவிட்டு வந்த இரண்டு பெண்களிடமும் தனித்தனியாக அவரவர்கள் கக்ஷியை எடுத்துச் சொல்லும்படி கேட்டாள் கிழவி. மூத்த மகள் தன் பாரத்தை முடிப்பதற்குள் விடிந்துவிடும்போலிருந்தது. அவளுடைய வாக்குமூலத்தில் சிற்சில இடங்களில் பொய்யும் உயர்வுநவிற்சியும் இருக்கிறதென்று வள்ளியம்மை இடையிடையே மறித்துப் பேசியபோது, பழையபடியும் ஒரு ஐந்து நிமிஷம் இருவரும் ஒரு சிறு சண்டை போட்டுக்கொள்வார்கள். கிழவிக்கு ஒன்றும் புரியவில்லை. இரண்டு பேர் கட்சியிலும் நியாயம் இருப்பது போலவும் இருந்தது; அநியாயம் இருப்பது போலவும் இருந்தது. அதாவது நியாய அநியாயம் இரண்டும், பெண்களுடைய வாக்கு வன்மையைப் பொறுத்து இருந்ததே ஒழிய, உண்மை புலப்படுவதாகத் தோன்றவில்லை. கிழவி பேந்தப் பேந்த விழித்தாள். எப்படியும், விடிந்தால்

மருமகன்மார்கள் வந்ததும் அவர்களை வைத்து விஷயத்தை ஒழுங்கு செய்துவிட வேண்டும் என்று தீர்மானித்துப் படுத்துக் கொள்ளப் போய்விட்டாள். வள்ளியம்மையும் தன் வீட்டுக்குப் போயிருந்துகொண்டு அடுத்த வீட்டில் என்ன நடக்கிற தென்று சுவரில் சாய்ந்து கேட்டுக்கொண்டேயிருந்தாள். ராம லக்ஷ்மியோ தூங்கப்போன கிழவியைத் தூங்கவிடாமல் 'குசு குசு' என்று என்னென்னவோ சொல்லிக்கொண்டிருந்தாள். ஆனால் கிழவிக்குத் தூக்கம் கட்டுக்கடங்காமல் வரவே, ராம லக்ஷ்மி மிகவும் மனவருத்தத்தோடு எழுந்து வந்து படுத்துக் கொண்டாள்.

விடிந்தது. மருமகன்மார்களும் வந்தார்கள். மீனாக்ஷிக் கிழவியின் கண்களுக்குத் திருப்தியாகப் படும் முறையில் இரண்டு பேருமே தம் சம்சாரங்களை இரண்டு அதட்டு அதட் டிப் பூச்சாண்டி காட்டி நிறுத்திவிட்டார்கள்.

தைப் பொங்கலன்று கிழவி தன் மூத்த மகள் வீட்டில் தான் சாப்பிட்டாள்; இரண்டொரு நாட்களில் மார்த்தாண்டம் பட்டிக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

இரண்டு பெண்களும் ஒருவருக்கொருவர் ஆரம்ப காலத் தில் செய்துகொண்ட உதவிகளைக்கூட இப்போது கெட்ட அர்த்தம் செய்து வஞ்சகமான காரியங்களாகப் பாவித்துப் பேசியது கிழவிக்கு மனக் கஷ்டமாக இருந்தது. ஆனாலும், நியாயம் அநியாயம் எந்தப் பக்கத்தில் இருந்தாலும், கிழவிக்கு மூத்த மகளிடத்தில் ஏதோ ஒரு காரணமில்லாத அன்பு. அத னால் இளைய மகளை மனசுக்குள்ளேயே கொஞ்சம் கண்டித்துக் கொண்டாள்.

பங்குனி மாதத் தொடக்கம். ராமலக்ஷ்மியின் மகனுக்கு ஏதோ உடம்புக்கு அசௌகரியமாய் இருந்தது. அது இரண்டு குடும்பங்களும் பழையபடியும் கலந்து உறவாட ஒரு காரணமா யிருந்தது. அவ்வளவுதான்; காந்தம் பற்றிக் கொள்வதுபோல அக்காளும் தங்கையும் ஒட்டிக்கொண்டு கொஞ்சிக் குலாவினார் கள். இதைக் கண்ட அவர்களுடைய கணவன்மார்களும் ஒன்று சேர்ந்தே எந்தக் காரியத்தையும் செய்து வந்தார்கள். பழைய பகைமையைப் பற்றிய ஞாபகமே ஒருவருக்கும்

இல்லை. வள்ளியம்மை தன் ஏழு மாதக் குழந்தையையும் பொருட்படுத்தாமல் தன் அக்காள் பிள்ளையை எடுத்து வைத்துக் கொஞ்சுவாள். ராமலக்ஷ்மியோ தன் தங்கை குழந்தையின் அழுகுரல் கேட்டால் அடுப்பில் சாதம் வடித்துக்கொண்டிருந்தாலும் அதை அப்படியே போட்டுவிட்டு ஓடிப்போய்க் குழந்தையை எடுத்துக்கொள்ளுவாள். ஆகவே முன்னால், கல்யாணத்தின் ஆரம்பத்தில் இருந்த நிலை பழையபடியும் நிலவத் தொடங்கியது.

இந்தச் சமயத்தில் குளத்தூரில் யாரோ ஒருவர் இறந்து போனதற்காகத் துக்கம் விசாரிக்க வந்து சேர்ந்தாள் மீனாக்ஷியம்மாள். வந்து, பழையபடியும் தன் பெண்கள் ஒற்றுமையாய் இருப்பதைக் கண்டு சந்தோஷப்பட்டுக் கொண்டாள். இரவில் மூத்த மகள் வீட்டிலேயே சாப்பிட்டுப் படுத்துக் கொண்டாள். ராமலக்ஷ்மிக்கு மனம் என்னவோ போலிருந்தது; தைப் பொங்கலுக்குத் தன் தாயார் வந்து போனதற்கப்புறம், தன் மகன் உடம்புக்கு அசௌகரியமாயிருந்தபோது இரண்டு குடும்பங்களும் ஒன்று சேர்ந்துகொண்ட நாள் வரை, அந்த இடைக்காலத்தில் தனக்கும் தன் தங்கைக்கும் நடந்த சண்டை சச்சரவுகளை அம்மாவிடம் எடுத்துச் சொல்லவேண்டும் போலிருந்தது. அதைச் சொல்லாவிட்டால் அவள் உள்ளம் வெடித்துவிடும்போலத் தோன்றவே, கதையை ஆரம்பிக்கச் சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். இந்த நேரம் பார்த்து வெடிமருந்திலே தீக்குச்சியை உரசி வைத்தமாதிரி, அதுவரையிலும் சும்மா இருந்த கிழவி, ‘‘இவ்வளவு அன்பாதரவா இருக்கிறபோதே நடுவிலேயே ஏன் ஒருத்தருக்கொருத்தர் சண்டை போட்டுக்கொள்ளணும்? என்ன ராமலக்ஷ்மி?’’ என்று கேட்க ஆரம்பித்தாள்.

‘‘நானும் பொறுமையாத்தான் இருந்து பார்க்கிறேன். ஆனால்...’’

வழக்கம்போல மெதுவான குரலில் நாலைந்துமாத நிகழ்ச்சிகளை ஒன்றன்பின் ஒன்றாகச் சொல்லிக்கொண்டே வந்தாள். மறுநாள், வள்ளியம்மையும் எதை நினைத்தாளோ என்னவோ, தன் கதையையும் ஒன்றுக்குப் பத்தாகக் கிழவியிடம் சொல்லித்

தீர்த்தாள். பலன் என்ன? கிழவி மார்த்தாண்டம்பட்டிக்குப் புறப்படுவதற்கு முன்னமேயே சண்டை வந்துவிட்டது. ஆனால் இந்தச் சண்டையில் ஒரு விசேஷம் என்னவென்றால், இரண்டு மருமகன்மார்களும் தம் பெண்டாட்டிகள் கைவரிசையைக் காட்டட்டும் என்று எதுவும் பேசாமல் உட்கார்ந்து கொண்டு இருந்ததுதான். சண்டை முற்றி, பெண்கள் ஒருவருக்கொருவர் கைகலக்கப் போகும் சமயம், சந்தர்ப்பவசமாக அந்தத் தெருவோடு வந்துகொண்டிருந்த கிராம முனிசீப் பிள்ளை இங்கே வந்து சேர்ந்தார். மரியாதைக்காகச் சண்டையை நிறுத்தினார்கள். பக்கத்து வீட்டுக்காரர் ஒருவரும் வந்திருந்தார். அவர் கிராம முனிசீப்பிடம், ''இத்தனை நாளாக இரண்டு பேரும் (ராமலக்ஷ்மியும் வள்ளியம்மையும்) ஒருத்தருக்கொருத்தர் ஒத்துமையாயிருந்தாக. ஆனால் இந்தக் கிழவி வந்த நேர பலனோ என்னவோ, பழையபடியும் அடிபிடியாக் கிடக்கு'' என்றார்.

சண்டையின் காரணம் ஒருவருக்கும் விளங்கவில்லை. கிழவியோ, 'இருவரும் எக்கேடு கெட்டாவது போகட்டும். எதுவும் நம் காதில் விழாமல் இருந்தால் போதும்' என்று சொல்லி ஊருக்குப் போய்விட்டாள்.

## 3

ஒரு நாள் கைலாசம் வீட்டு எருமை, முருகையா வீட்டு வைக்கோல் போரின் பக்கம் நடந்துபோனதைக் கண்ட முருகையா தன் மனைவியிடம் வந்து, தினசரி எருமை இந்த வழியே போனதனால்தான் தன் வைக்கோல் போர் ஒரு மாதத்தில் பாதியாகக் கரைந்துவிட்டது போலிருக்கிறது என்று சொன்னான். அவன் அவ்வாறு சொன்னதற்குக் காரணம், மீனாக்ஷிக் கிழவி அன்று ஊரிலிருந்து வந்திருந்ததுதான்.

விடிவதற்கு முன்பே இடி முழக்கம் கேட்கத் தொடங்கி விட்டது!

இந்தக் கூச்சலைக் கேட்டு அரைத்தூக்கத்தோடு எழுந்து வந்தார் பக்கத்து வீட்டுக்காரர். அவர் வாசலுக்கு வந்து

பார்த்தபோது முதலில் மீனுக்ஷிக் கிழவிதான் அவர் கண்ணில் பட்டாள்.

''இந்தக் கிழட்டுச் சனியன் ஏன் வந்தது?'' என்று மனத்திற்குள்ளேயே கடிந்துகொண்டு நிற்கும்போது, கிழவி அவர் பக்கத்தில் போய், ''இந்த அநியாயத்தைப் பார்த்திகளா? என் கண்ணுள்ளபோதே (உயிரோடிருக்கிறபோதே) இப்படி ஒருத்தருக்கொருத்தர் அடித்துக்கொண்டு கிடந்தால், நான் செத்துப்போனதற்குப் பிறகு எப்படி ஒத்துமையாய்ப் பிழைக்கப் போகுதுகள்?'' என்ருள்.

உடனே அவர், ''நீ ஒரேயடியாய் மண்டையை உதறிஞல்தான் இந்தச் சச்சரவு நிற்கும். நீ இருக்கிற மட்டும் இந்தக் கலகம்தான்'' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள்ளே போய்விட்டார்.

மீனுக்ஷிக் கிழவிக்கு வழக்கம்போலவே ஒன்றும் புரியவில்லை. தான் வரும்போது மட்டும் இப்படி சண்டை மூண்டால் அதற்கு என்ன அர்த்தம்? எப்படிச் சுற்றிச் சுற்றி ஆராய்ந்து பார்த்தாலும் அவள் உயிரோடிருப்பது ஒன்றுதான் சண்டைக்குக் காரணமே தவிர வேறொன்றும் இல்லை என்பது பக்கத்து வீட்டுக்காரர் தீர்மானம். இதற்காக கிழவி வலியச் சாவது எப்படி? வேறு ஒரு வழியும் தோன்ருமல், 'செத்தாலும் இந்த ஊரை இனி ஏறிட்டுப் பார்ப்பதில்லை' என்று தீர்மானம் செய்துகொண்டு மார்த்தாண்டம்பட்டியைப் பார்த்து நடையைக் கட்டிஞள் மீனுக்ஷிக் கிழவி.

# ஓட்டப் பந்தயம்

ரயில் வண்டி தென் திசையை நோக்கி வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. மேல் பக்கமாக உள்ள ஜன்னலோரத்தில் நான் உட்கார்ந்து கொண்டிருந்தேன். அவ்வளவு கூட்டத்திலும், விதி கட்டளையிட்டு அமர்த்திக் கொடுத்தமாதிரி அந்த மேல் பக்கமாகத்தான் இடம் கிடைத்தது. மாலை ஐந்து மணி இருக்கும். சுமார் ஒரு மாதத்துக்குப் பிறகு, திருச்சி—மதுரை மார்க்கத்தில் மறுபடியும் பிரயாணம் செய்யவேண்டி ஏற்பட்டது.

வண்டி ஓடிக்கொண்டிருந்தது. சிறிது தூரத்தில் சின்னஞ் சிறு பனங் கன்றுகள் தென்பட்டன. ஏதாவது ஒரு காரணத்தை, ஒரு நினைவுப் பொருளை வைத்துத் தினம் தினமும் இதயத்தில் நடக்கும் சோக நாடகத்தின் அன்றைய ஆட்டத்துக்கு அந்தப் பனங் கன்றுகள் காரணமாகிவிட்டன. இப்படி எதையும் பார்த்து மனதை அலட்டிக்கொள்ளாமல் இருக்கக் கண்களை மூடினாலோ, அது இன்னும் சகிக்கமுடியாத வேதனையாக இருந்தது.

*　　　*　　　*

''இந்தப் பனங்கன்றுகள் வளர்ந்து பலன் தர எவ்வளவு காலம் ஆகும்?''

''சுமார் பத்துப் பதினைந்து வருஷங்கள் பிடிக்காதா? உம்?''

''சரி, ஏதோ பதினைந்து என்று வைத்துக்கொள்வோம். நாம் இருவரும் ரயிலில் இப்போது போய்க்கொண்டிருக்கிறோம். இருவரும் பிரம்மச்சாரிகள். ஆனால் இந்தப் பனங்கன்றுகள் பெரிய பனைகளாகிக் குலை தள்ளும்போது என்றாவது ஒருநாள் நாம் இதே மார்க்கத்தில் ரயில் பிரயாணம் செய்யத்தான்

போகிறோம். அப்போது வாழ்க்கையில் என்னென்ன மாறுதல்களோடு எந்த நிலைகளில் நாம் இருக்கப் போகிறோமோ!...இன்றைக்குத் தேதி என்ன?''

''பதினைந்து; 15—7—44'' என்றான் குமாரசாமி.

இது ஒரு மாதத்துக்கு முந்திய சமாச்சாரம். அன்று ரயில் வடக்கு நோக்கிப் போய்க்கொண்டிருந்தது. என்னுடைய நண்பன் குமாரசாமி தென்காசியிலிருந்து திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் வந்துகொண்டிருந்தான். நான் சந்தர்ப்பவசமாக, மதுரையிலிருந்து வண்டி ஏறும்போது அவனைப் பார்த்துவிட்டேன். அவனும் எப்படியோ என்னை எதிர்நோக்கி ஜன்னல் வழியே தலையை நீட்டிக்கொண்டிருந்தான். ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டோம். அன்று திருச்சிக்கு ஒரு காரியமாகப் புறப்பட்ட எனக்குச் சுமார் ஐந்து மணி நேரப் பிரயாணத்துக்கு ஒரு நண்பனுடைய துணை கிடைத்துவிட்டது என்ற ஆனந்தத்துடன் அவன் கையைப் பிடித்து வண்டி ஏறினேன். அவனுக்குத் தென்காசியில் கிடைத்த வேலை முடிவடைந்து விட்டது. அதனால் சென்னைக்கு ஒரு உத்தியோகத்தை நாடிப் போய்க்கொண்டிருந்தான். வண்டி ஏறிய பரபரப்பில் ஒருவரோடு ஒருவர் விஸ்தாரமாக வெகுநேரம் வரை பேசிக்கொள்ள முடியவில்லை. வண்டி புறப்பட்டுச் சிறிது தூரம் போகும்வரை ஒன்றும் பேசாமலே இருந்தோம். அப்புறம் விளாங்குடி ஸ்டேஷன் கடந்ததும் மேற்சொன்ன பனங்கன்றுகள் பற்றிய சம்பாஷணை நடந்தது. சம்பாஷணைக்குப் பின் மௌனம்.

இதுவரை அவன் சுமார் ஐந்தாறு இடங்களில் பார்த்த உத்தியோகமும் நிலைப்பானதாக இல்லாமல் போய்விட்டது. அவனைவிட்டுப் பிரியாமல் அவன் கூடவே வாழ்க்கையைப் போக்க விரும்பி என் சொந்த ஊரில் கிடைத்த ஒரு நிரந்தரமான வேலையையும் உதறிவிட்டு அவனோடு அம்பாசமுத்திரத்தில் குறைந்த சம்பளத்திலே ஒரு வேலையில் அமர்ந்தேன். அங்கே ஒரு எட்டு மாதம் இருந்தோம். இருவருக்கும் வேலை முடிந்துவிட்டது. ஊர் திரும்பினோம். இப்படி எத்தனையோ இடங்களுக்கு அவனை நிழல்போல் தொடர்ந்து போயிருக்

கிறேன். என்னைத் தொடரும்படிக்கும் அவன் வாழ்க்கையில் பல மாறுதல்கள் செய்திருக்கிறேன்.

அன்று அந்த எக்ஸ்பிரஸ் வண்டி சிறு ஸ்டேஷன்களில் நிற்காமல் வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அன்றும் மேல் பக்கத்து ஜன்னலோரம் இருந்த நான் அஸ்தமனமாகும் மேல் வானத்தை என்றும்போலப் பார்த்து அனுபவிக்கத் தொடங்கினேன். வண்டியை எதிர்த்துக் கற்றுழைகளும் சிறு செடிகளும் மிகவும் வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. சற்றுத் தண்டவாளத்தைவிட்டுத் தூரத் தள்ளியிருக்கும் மரங்கள் கொஞ்சம சாவதானமாக என் பார்வையை விட்டு ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் வெகு தொலைவில் நீல நிறத்தில் காணப்படும் மேற்குத் தொடர்ச்சிமலை மட்டும் என் ரயிலோடு தொடர்ந்து வந்துகொண்டிருந்தது. இதிலெல்லாம் ஏதோ ஒரு சோகமயமான உவமையை அமைப்பதில், அஸ்தமன சூரியனையும் வண்டியில் எதிரே இருக்கும் என் நண்பனையும் மறந்து ஈடுபட்டேன்.

என் மௌனத்தைக் கலைத்து நண்பனே பேச்சை ஆரம்பித்தான்:

"நீ திருச்சியிலிருந்து திரும்ப எவ்வளவு நாளாகும்?"

மௌனம் கலைந்து ஏறிட்டுப் பார்த்தேன். அவன் மறுபடியும் தன் கேள்வியைப் போடவே, பதில் சொன்னேன்:

"அதிகமாய்ப் போனால் ஒரு வாரம்."

"திருச்சியில் ஜோலி முடிந்ததும் சென்னைக்கு ஒருமுறை வந்து போயேன்."

"வீண் செலவு எதற்கு? இதுவரை செலவழித்தும் அலைந்தும் என்ன கண்டோம்?" என்று கூறிவிட்டு, முகத்தை மேற்குத் தொடர்ச்சி மலையை நோக்கித் திருப்பிக்கொண்டேன்.

அவன் உடனே பதில் சொல்லவில்லை. திடீரென்று அவன் குரல் விக்கியது. திரும்பிப் பார்த்தேன்.

"வயிற்றுப் பிழைப்பு!..."

"என்ன? என்ன சொல்லுகிறாய் குமார்?"

"எனக்குப் பத்திருபது நாட்களாக ஜுரம். நாளைக் காலையில் பதினொரு மணிக்குள் சென்னையில். பேட்டிக்கு ஆஜராக நிற்காவிட்டால் வேலை கிடைக்காது..."

அவன் கண்களில் கண்ணீர் கொப்புளித்தது.

"உடம்புக்கு இப்படி ஏதாவது என்றால் முன்னாலேயே ஏன் லட்டர் போடக்கூடாது?"

அதற்கு அவன் பதில் சொல்லாமல், சிறிதுநேர மௌனத்துக்குப்பின், "நீயாவது நிம்மதியாக உன் வேலையைப் பார்" என்று நடுங்கிக்கொண்டே சொன்னான்.

"சரி சரி. ஜுரத்தோடு சும்மா பேசாதே...நீ தென்காசியிலிருந்து வருகிறவன்...சென்னைக்கு நேராகவே டிக்கட் எடுத்துவிட்டாயோ?"

"நாளை பதினொரு மணிக்குச் சென்னையில் இருக்க வேண்டியவன் நேராக டிக்கட் எடுக்காமல் என்ன செய்வான்?"

"...கஷ்டம்! இன்றிரவு திருச்சியில் இறங்கி என்னோடு தங்கக்கூட உனக்கு அவகாசம் இல்லைபோலிருக்கிறதே!"

பதிலுக்குப் புன்னகை செய்தான் ஒருவித உணர்ச்சியுமில்லாமல். இரவு மணி பத்திருக்கும். வண்டிக்கு வெளியே எல்லாம் மறைந்துவிட்டது. இந்தப் பிரபஞ்சத்துக்குள்ளே ரயில் வண்டி ஒன்றுதான் எஞ்சிய பொருளாக எதிர்ப்பாரில்லாத சேனைபோல் முன்னேறிச் சென்றது. அடிக்கொரு தடவை அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்துக்கொண்டிருந்தேன். வண்டி திண்டுக்கல் கடந்துவிட்டது. அவன் உடலில் இலேசாக வியர்க்க ஆரம்பித்தது. உடனே போர்வைத் துணியை எடுத்துவிட்டேன். அவனோ என் வலதுபுஜத்தில் தலையைச் சாய்த்து உறங்கிக்கொண்டிருந்தான். ஜுரம் நின்றுவிட்டது என்ற சந்தோஷத்தோடு எதிர்காலத்தைப்பற்றிச் சிந்தித்த வண்ணம் இருளை நோக்கினேன். இருளைப்போலத்தான் எதிர்காலமும் தெளிவற்று இருந்தது.

திருச்சி வரும் முன்பே குமார் விழித்துக்கொண்டான். அவன் முகத்தில் தெம்பு காணப்பட்டது. கலகலவென்று உற்சாகத்தோடு பேசினான். குளிர்காற்றுக்காகப் பயந்து

முன்பு மூடிவைத்த ஜன்னலை வேர்க்கிறது என்று சொல்லித் திறக்கச் சொன்னான்.

"குளிர் ஊசிமாதிரி பாய்கிறது. சும்மா இரு" என்று சொல்லிவிட்டு என் முகத்தைத் திருப்பிக்கொண்டேன். குமார் சிரித்தான்.

திருச்சிக்கு நான் ஒரு முக்கியமான அவசர காரியமாகப் போய்க்கொண்டிருந்தேன். அதனால்தான் நான் அவனோடு சென்னைக்குப் போக முடியாமல் போய்விட்டது. கடைசியில் திருச்சியில் நான் தங்கப்போகும் ஹோட்டலின் விலாசத்தை அவனுடைய டைரியில் எழுதி வைத்துவிட்டு, லட்டர் போடும் படி பல தடவையும் வற்புறுத்திச் சொன்னேன். சென்னைக் குப் போய் வேலையில் அமரும் விபரத்துக்கு உடனே கடிதம் போடுவதாக அவனும் சொன்னான்.

திருச்சி வந்துவிட்டது. நான் இறங்கினேன். அவனுக்குப் பசிக்கு ஏதாவது வாங்கிவரலாம் என்று போனேன். ஜுரம் அடிப்பவனுக்கு எதைக் கொடுப்பது என்று தெரியவில்லை. கடைசியில், கூஜாவில் கொஞ்சம் காபியும், இரண்டு இட்டிலி யும் வாங்கிக்கொண்டு வந்து வண்டி ஏறினேன். அவன் பொட்டலத்தைப் பிரித்துச் சாப்பிட்டான். காபி சாப்பிட்டு முடிந்ததும் என் பெட்டி படுக்கையை எடுத்துக்கொண்டு வெளியே இறங்கினேன். வண்டி புறப்படும் சமயம். "போன தும் டாக்டரிடம் உடம்பைக் காட்டி மருந்து சாப்பிடு. கண்ட படி எல்லாம் ஒன்றிருக்க ஒன்றைச் செய்து பழையபடியும் ஜுரத்தை வருவித்துக்கொள்ளாதே! போனதும் லட்டர் போடு" என்று சொல்லி வழியனுப்பினேன்.

வண்டி புறப்பட்டுப் போய்விட்டது. நானும் ஹோட்டல் அறைக்குப் போய்ச் சேர்ந்தேன்.

அவனுடைய எதிர்கால க்ஷேமமே என் கனவாக இருந் தது. அவன் நட்புக்கும் அன்புக்கும் எதைச் செய்தாலும் போதாது. பெலிக்கன் என்ற ஒரு மேல்நாட்டுப் பறவை தன் மார்பை அலகால் குத்திக் குத்தி அதிலிருந்து ரத்தத்தை எடுத் துக் குஞ்சுகளுக்கு உணவாக ஊட்டுமாம்! அந்த அளவுக்கு

அவனுக்காக நான் எதையும் தியாகம் செய்யத் தயாராக இருந்தேன். அன்றிரவு உறக்கமே பிடிக்கவில்லை.

* * *

திருச்சிக்குச் சென்ற ஐந்தாவது நாள், என் ஜோலி முடிந்து ஊருக்குப் புறப்படத் தயார் செய்துகொண்டிருந்தேன். குமாரிடமிருந்து கடிதம் காணுமல் திகைத்துக்கொண்டிருக்கும்போது ஒரு கார்டு வந்து சேர்ந்தது. அவன் எழுதியதுதான் அவனுடைய உடல்நிலையைக் கண்டு ஒரு மாதத்துக்கு அப்புறம் குணமான பிறகு வருமாறு, வேலை கொடுக்க நினைக்கும் அதிகாரிகள் சொல்வதாகவும், அதனுல் அவன் திருச்சிக்குப் புறப்பட்டுக்கொண்டிருப்பதாகவும் எழுதியிருந்தான். இவனுக்கு ஏன் இப்படிப் புத்தி போகிறது? ஏன் இந்த வீண் அலைச்சல்? சென்னையில் பேசாமல் ஒரு ஆஸ்பத்திரியில் இருந்தால் நான் போயிருக்க மாட்டேனு? நிச்சயமாக அவன் புறப்பட்டு வந்துகொண்டிருப்பானென்று எண்ணி நான் ஊருக்குப் போவதை ஒத்திப் போட்டுவிட்டுத் திருச்சி ரயிலடியில் போய் அவன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

மனத்திற்குள் ஒரே சிந்தனை. அவனுடைய கடந்த நாலு வருஷ வாழ்க்கையில் ஐந்து ஊர்களில் வாழ்க்கை நடத்தியிருக்கிறுன். அவனேடு இடைவழியில் தொடர்பு வைத்திருந்த எத்தனையோ நண்பர்கள் அவனை விட்டுப் போய்விட்டார்கள். நான் மட்டும் என் வேலையைப்பற்றிய கவலையில்லாமல் ஒவ்வொரு ஊருக்கும் அவனைப் பின்தொடர்ந்து ஓடி இருக்கிறேன். இருவரும் ஏதோ ஒரு கற்பனை உலகின் சுகவாசத்தை லட்சியமாகக்கொண்டு ஓடிக்கொண்டிருந்தோம். இளைப்பாறக் கூட நேரம் இல்லை. ஆனுல் யாருடைய துரதிருஷ்டமோ, நான் அவனைப் பின்தொடர்ந்து போய் வாழ்க்கை நடத்தத் தொடங்கிய சிறிது காலத்திற்குள் அவன் வேறெரு புதிய ஊருக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடும். பழையபடியும் என் ஓட்டம்!

இரவு மூன்று மணிக்கு 'எக்ஸ்பிரஸ்' வண்டியில் வந்து இறங்கினுன் குமார். முக்காடு போட்டுக்கொண்டிருந்தான். ஒரு வாரத்துக்குள்ளாக எவ்வளவு மாறுதல்! அவனுல் 'பிளாட் பார'த்தில் நிற்கவே முடியவில்லை. அவனைக் கைத்தாங்கலாக அழைத்துக்கொண்டு வந்து ஜட்காவில் ஏற்றினேன்.

ஹோட்டல் அறைக்கு வந்ததும் அவனுடைய நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. வார்த்தைகள் குழறிக் குழறி வெளிவந்தன. அவனைப் பத்திரமாகப் படுக்கையில் படுக்க வைத்துப் போர்வையை இரண்டாக மடித்து மூடினேன். அவனுல் பேசமுடியாமற் போகவே எனக்கு மிகவும் பதற்றமாகி விட்டது. இருந்தாலும் மெதுவாக, "சென்னையில் யாராவது டாக்டரிடம் உடம்பைக் காண்பித்தாயா, குமார்?" என்று கேட்டேன்.

'ஆமாம்' என்ற தோரணையில் தலையை அசைத்துவிட்டுத் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு காகித மடிப்பை எடுத்தான். அதற்குள் இரண்டு மாத்திரைகள் இருந்தன. ஜுரம் வரும் போது அதை விழுங்கும்படி டாக்டர் சொன்னதாகத் தட்டுத் தடுமாறிச் சொன்னுன். ஒரு மாத்திரையை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு திரும்பிப் படுத்தான். மடிந்துகிடந்த போர்வையின் மூலைகளை அவன் கால்பக்கமாக நன்ருக இழுத் துப் போர்த்துவிட்டு வெளியே வராந்தாவுக்கு வந்தேன். காற் ருேட்டத்துக்காக 'ரூம்' வாடகை பிடித்தவர்களில் அநேகர் வெளியே படுத்திருந்தார்கள். வானத்தையும், சந்தடியற் றிருக்கும் கடைத்தெருவையும் சிந்தனையற்றுப் பார்த்துக் கொண்டு நின்றேன். என் அறைக்குள் விளக்கு எரிந்து கொண்டு இருந்தது.

அங்கே படுத்திருந்தவர்களில் ஒருவர் மிகவும் சாவதான மாகவும் பயத்தோடும் என்னைப் பார்த்து, "நீங்கள் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே, ஸார். உங்களிடம் ஒரு விஷயம் கேட்கவேண்டும்" என்ருர்.

"என்ன விசேஷம்?"

"நீங்கள் கைத்தாங்கலாகக் கூட்டி வந்தீர்களே, அந்த ஆளுக்கு உடம்புக்கு என்ன?"

"ஒன்றுமில்லை, ஜுரம் காய்கிறது."

"டாக்டரை அழைத்து வந்து பார்க்கச் சொல்லக் கூடாதோ?"

"அதைத்தான் நானும் யோசித்துக்கொண்டிருக்கிறேன். இந்த நேரத்தில் டாக்டரைத் தேடிப் பிடித்துக்கொண்டு வருவது எப்படி? எனக்குத் திருச்சியில் எவரையும் முன் பின் தெரியாது."

இந்தச் சமயத்தில் கக்கூஸ் அறையிலிருந்து வயது சென்ற கிழவர் ஒருவர் வந்தார். "டாக்டர்," "ஜுரம்" என்ற வார்த்தைகள் காதில் பட்டதும் "என்ன விசேஷம்?" என்று எங்களை விசாரித்தார். நான் விஷயத்தைச் சொன்னேன். அவர், "உங்களுக்கு எந்த ஊரோ?" என்று கேட்டுவிட்டு என் பதிலை எதிர்பார்க்காமல், "அவர் எங்கே படுத்திருக்கிறார்?" என்று கேட்டார். நான் அறையைக் காட்டினேன். அவர் எங்களை அழைத்துக்கொண்டு என் அறைக்குள் நுழைந்தார். குமார் தூக்கத்தில் ஏதேதோ புலம்பிக்கொண்டிருந்தான். கிழவர் அவன் கையைப் பிடித்து நாடியைப் பரிசோதித்தார். வெகு நேரம் கழித்து, "நான் ஒரு மாத்திரை கொடுக்கிறேன். அதை வாயில் போட்டுக்கொள்ளச் சொல்லுங்கள். காலையில் மருந்து கொடுக்கலாம்" என்று சொல்லிவிட்டு அவருடைய அறைக்குள் என்னை அழைத்துச் சென்றார். நான் மிகவும் கவலையோடு, "நாடி ஓட்டம் சரியாகத்தானே இருக்கிறது?" என்று கேட்டேன்.

அந்த வைத்தியர் ஒரு பதிலும் சொல்லவில்லை. மாத்திரையை மட்டும் ஒரு சிறு பெட்டியிலிருந்து எடுத்துக் கொடுத்தார். "காலை ஐந்து மணி ஆகட்டும் அப்புறம் மருந்து கொடுப்போம்" என்று சொல்லி என்னை அவர் அனுப்பினார்.

அப்போது மணி நாலு. இன்னும் ஒருமணி நேரம் இருக்கிறது என்று கடிகாரத்தைப் பார்த்துவிட்டு என் அறைக்குள் வந்து உட்கார்ந்தேன். நண்பனை எழுப்பி அந்தக் கிழவர் கொடுத்த மாத்திரையைக் கொடுத்துவிட்டுப் பக்கத்தில் உட்கார்ந்தேன். அவன் பழையபடியும் உறங்கிவிட்டான். ஜுரம் பொரிந்து கொட்டியது.

சிறிதுநேரம் கழித்து வந்து கடிகாரத்தைப் பார்த்தேன். நாலு பத்து. சரி, இன்னும் ஐம்பது நிமிஷங்கள் கழியும் வரை பெரிய சோதனைதான் என்று மறுபடியும் வந்து குமாரின் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். வைத்தியர் ஐந்து மணி என்று சொல்லிக் கெடு வைத்ததை நினைக்கப் பயமாக இருந்தது.

சற்று அதிகமாகவே உட்கார்ந்திருந்துவிட்டு இலேசாகப் படுக்கையில் சாய்ந்தேன். பிறகு, வெளியே வந்து கடிகாரத்தைப் பார்த்தேன். முன்னைவிட இப்போது ஏழு நிமிஷங்கள் தான் அதிகமாகக் காட்டியது கடிகாரம். 'இதென்ன, ஏழு நிமிஷங்கள்தானு ஆகியிருக்கும்? ஒருவேளை நம் படபடப்பினுல்தான் வெகுநேரம் ஆகிவிட்டதுபோல் தெரிகிறதோ?' என்று நினைத்துக்கொண்டு பழையபடியும் அறைக்குள் வந்தேன்.

கடைசியில், நீண்ட நேரத்துக்குப் பின்னர் அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். உடம்பு 'ஜில்'லிட்டு இருந்தது. ஜுரம் நின்றுவிட்டதென்று போர்வையை எடுத்துவிட்டேன். இருந்தாலும் பேச்சு மூச்சின்றிக் கிடந்தான். அப்புறம் தண்ணீர் வேண்டுமென்று கைஜாடை போட்டான். அந்த இரவில் யார் வெந்நீர் வைத்துக் கொடுப்பார்கள்? வெளியே வந்து தெருவை எட்டிப் பார்த்தேன். ஜன நடமாட்டமே இல்லை. பிச்சைக்குச் சென்றவனை வெளியே தள்ளி, உலகமே கதவை அடைத்துக்கொண்டு விட்டது போன்ற நிலை.

கடிகாரத்தைப் பார்த்தேன். என்ன இது? பழையபடியும் அதே நாலு பதினேழுதான்! அதற்கு அப்புறம் கொஞ்சம்கூட முள் நகரவே இல்லை. கடிகாரம் ஓடும் சப்தம் கேட்கிறதா என்று உற்றுக் கேட்டேன். ஒரே நிசப்தம்!

கடிகாரம் நின்றுவிட்டது!

அடக்கமுடியாத பரபரப்போடு அறைக்குள் ஓடி வந்தேன்.

அவன் இருதயத்தையும் நாடியையும் தொட்டுப் பார்த்தேன்...ஆம்; மிகவும் கவனமாகவே பார்த்தேன்...ஆனுல், எப்பொழுதோ மணி ஐந்து ஆகிவிட்டது!

* * *

என் கதையை இன்னும் வளர்ப்பானேன்? நூற்றுக்கணக்கான மைல்கள் அவனோடு ஓடினேன்; ஓடவும் இருந்தேன். ஆனால், அவனோ, தொடர முடியாத வேகத்துடன் ஓடி மறைந்துவிட்டான்!

இன்று நான் பிரயாணம் செய்யும் ரயில் வண்டி மதுரையை அடுத்து வந்துவிட்டது. எதிரே வரும் குத்துச் செடிகள், வயல்கள் எல்லாம் பளிச்சென்று தோன்றி மறைகின்றன. தூரத்தே தெரியும் மரங்கள் ரயிலோடு தொடர்ந்து ஓட முடியாதபடி பின்தங்கி விடுகின்றன. மிகவும் அதிக தூரத்தில் தெரியும் அந்தப் பிரம்மாண்டமான மேற்குமலைத் தொடரின் ஒரு சிகரம், நான் திண்டுக்கல் பக்கமாக வரும்போது எனக்கு நேர் மேற்கில் இருந்தது. என்னோடு அநேக மைல்கள் ஓடி வந்த அந்தச் சிகரம், இப்போது அதையுங்கூடக் காணவில்லை; மறைந்துவிட்டது.





# ஆசிரியரின் பிற நூல்கள்

| | ரூ. ந.பை |
|---|---|
| ***சிறுகதைத் தொகுதிகள்*** | |
| சிரிக்கவில்லை | 2 00 |
| காலகண்டி | 2 00 |
| தெய்வம் பிறந்தது | 2 00 |
| இரு சகோதரர்கள் | 2 00 |
| அழகிரிசாமி கதைகள் | 3 75 |
| ***நாவல்*** | |
| டாக்டர் அனுராதா | 2 50 |
| ***கட்டுரைத் தொகுதிகள்*** | |
| இலக்கியச் சுவை | 2 25 |
| இலக்கியத் தேன் | 2 25 |
| இலக்கிய அமுதம் | 2 25 |
| இலக்கிய விருந்து | 2 25 |
| தமிழ் தந்த கவியமுதம் | 5 50 |
| நான் கண்ட எழுத்தாளர்கள் | 2 00 |
| ***சிறுவர் கதைத் தொகுதிகள்*** | |
| மூன்று பிள்ளைகள் | 1 00 |
| காளி வரம் | 1 00 |
| ***பதிப்பித்தவை*** | |
| கம்ப ராமாயணம்—முதல் பாகம்* | 2 00 |
| ,, —இரண்டாம் பாகம் | 2 00 |
| அண்ணாமலை ரெட்டியார் காவடிச்சிந்து (குறிப்புரை, ஆராய்ச்சி முன்னுரையுடன்) | 1 75 |

---

* இந்த அடையாளமிட்ட நூல் கைவசமில்லை.